கன்னியாகுமரி மாவட்டத்தில் கல்கி !!

KALKI 15.6.86 ரூ.1.50

# கல்கி



## இந்த நெருப்பை அணைப்பது யார்?

## அரசு
## ரப்பர் கழகமா? ஊழல் கழகமா?

# வளமுடன் நலமாய் அனைவரும் வாழ

# கிரௌன் காயகல்பம்

இளமையும் வலிமையும் இறைவனின் அருட்கொடைகள்! இளமையில் ஆரோக்கிய வலிமையை முறையோடு பாதுகாத்தால் முதுமையிலும் வாழ்க்கையை இளமை உணர்வோடு சுவைக்கலாம்!

மனிதன் என்றென்றும் இளமை உணர்வோடு வாழப் பண்டைய சித்தர்களின் அரிய கண்டுபிடிப்புதான் காயகல்பம்! 'காயகல்பம்' என்றால் வெறும் செக்ஸ் டானிக் மட்டும்தான் என்று எல்லோரும் நினைக்கிறார்கள். இது தவறான கருத்து. காயமாகிய உடலை நெடுங் காலம் (கல்பகாலம்) ஆரோக்கியமாக வாழ வைக்கும் அமிழ்தம் என்று காயகல்பத்திற்குப் பொருள்கொள்ள வேண்டும். ஆறிலிருந்து அறுபதுவரை அனைவரும் வலிவோடும் பொலிவோடும் வாழ்வதற்கு அவசியமான பல மூலிகை மருந்துகளும் தங்கம் வெள்ளி முதலிய நவலோகப்பற்பங்களும், காயகல்பத்தில் அடங்கி இருக்கின்றன. பெய்கின்ற மழையின் தன்மை ஒன்றுதான் என்றாலும் அதனை ஏற்றுக்கொள்ளும் நிலங்களின் இயல்புக்கேற்ப விளைவுகள் மாறுபடுகின்றன அல்லவா! அதைப்போலவே, காயகல்பத்தை உட்கொள்கிறவர்களின் வயதிற்கும் இயல்பிற்கும் ஏற்ப காயகல்பம் அவரவர்களின் உடற் கூறுகளுக்கு தக்கவாறு இயங்கி ஆரோக்கியமான விளைவுகளை ஏற்படுத்துகிறது! காயகல்பத்தின் சிறப்பியல்புகளைச் சுருக்கமாகக் கூறுவதென்றால்

- வளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்கு வலிமையும் கொழுமையும் ஊட்டும்!
- நலிந்தும் மெலிந்தும் நோஞ்சான்களாகியுள்ள இளைஞர்களுக்கும், யுவதிகளுக்கும் உடலில் வலிவும் பொலிவும் மிளிரச் செய்யும்.
- அலுத்து, சலித்து விரக்தி அடைந்துள்ள தம்பதிகளுக்கும் நடுத்தரவயதினருக்கு வாழ்க்கையில் புதிய சுவையும் புத்துணர்வும் அளிக்கும்.
- நாள்முழுதும் அலுவலகப் பணிகளில் ஈடுபட்டு உடலும் உள்ளமும் ஓய்ந்து சோர்ந்த உழைக்கும் நிர்வாகிகளுக்கு இழந்த வலிமையை எளிதில் ஈடுகட்டும்!
- முதுமையில் ஏற்படுகிற வாய்வுக் கோளாறுகள், மலச்சிக்கல், சீரணக் கோளாறுகள் முதலியவைகளைச் சீர்படுத்தும்.
- குறிப்பிட்ட வியாதிகளுக்காக அல்லோபதி மருந்துகள் உட்கொள்ளும் போது துணைமருந்தாக காயகல்பத்தையும் சேர்த்து சாப்பிடலாம். உதாரணமாக, நீரிழிவிற்கான அல்லோபதி மாத்திரைகளுடன் உடல் வலிமைக்காகக் காயகல்பமும் உட்கொள்ளலாம்.
- எப்பொழுதும் எல்லோரும் சுறுசுறுப்பாக இயங்கி வாழ்க்கையில் முன்னேற ஆக்கமும், ஊக்கமும் அளிக்கும். எல்லாக்காலங்களிலும், எந்த நேரத்திலும், எல்லோருக்கும் ஏற்றது காயகல்பம்! பத்தியம் எதுவும் இல்லை!

**125 கிராம், 500 கிராம் ஆகிய அளவுகளில் எல்லா இடங்களிலும் கிடைக்கிறது.**

★★★★★★★★★★★★★★★ காலை 10.00 மணிமுதல் 12.00 மணிவரை, மாலை 5.00 மணிமுதல் 7.00 மணிவரை மருத்துவ ஆலோசனையை நேரிலும், தபால் மூலமும் பெறலாம். ★★★★★★★★★★★★★★★

**தயாரிப்பாளர்கள்:**



**கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ்**
55, ஹாரிஸ் சாலை, புதுப்பேட்டை,
சென்னை-600 002

**தமிழக விநியோகஸ்தர்கள்:**

**கிரௌன் பார்மசூட்டிகல் ஏஜென்ஸிஸ்,**
2, சுப்பராய முதலி தெரு, புதுப்பேட்டை,
சென்னை-600 002

**கிரௌன் மார்க்கெட்டிங் எண்டர்பிரைசஸ்,**
2, சுப்பராய முதலி தெரு, புதுப்பேட்டை,
சென்னை-600 002






CHP/K/1/86

**Distributors for Malaysia:** M/s. Koperasi Belia Majujaya (M) Berhad, Wisma Anbananthan 88, Jalan Brickfields Kuala Lumpur, Malaysia Phone: 443748 442100.

M/s. P. Govindasamy Pillai S'pore (Pte) Ltd., 46, 48, 50 & 52, Sarangoon Road, Singapore — 0821 Phone: 3372050.

# "ஜெயில் வேண்டாம்; ஜெனரல் வார்டே போதும்!"


சுப்பிரமணியப் பிள்ளை. • ஸஜ்ஜாத் ஸாஹிர்.

"பத்மனாபபுரம் அரசு மருத்துவமனை, மிகப் பழைமையானது. இம்மருத்துவமனை ஆரம்பிக்கப்பட்ட நாளிலிருந்த கட்டிடங்களிலேயே இன்றும் இயங்கி வருகின்றது. படுக்கை வசதிகளோ, தண்ணீர் வசதியோ, கழிவு நீர் வெளியேற்றும் வசதியோ, போதிய அளவு கிடையாது என்னும் போது மருத்துவ வசதிகளைப் பற்றிக் கேட்கவே வேண்டாம் என்றுதான் தோன்றுகிறது. இரண்டு அறைகளைக் கொண்ட ஒரு கட்டிடத்தினுள் பிரசவ வார்டு இயங்கி வருகின்றது! இடநெருக்கடி காரணமாக, அந்தக் கட்டிடத்தின் வராந்தாவிலும் பிரசவமான பெண்களை நெருக்கமாகப் படுக்க வைத்திருக்கிறார்கள்!

''பிரசவ வார்டு பக்கத்திலேயே கழிவு டேங்கையும் அமைத்திருக்கிறார்கள். சில வேளைகளில் அது நிரம்பி வழியும் போது.... குடலைப் பிடுங்கினது மாறி நாற்றம் எடுக்கும். தினசரி வரும் வெளி நோயாளிகளைச் சரிவரக் கவனிப்பதற்குப் போதிய மருத்துவர்கள் இங்கில்லை!''

இந்த விவரங்களைக் கூறியவர் தக்கலையைச் சேர்ந்த எம். ஸஜ்ஜாத் ஸாஹிர் என்பவர்.

தக்கலை ஜங்ஷனில் சைக்கிள் கடை வைத்திருக்கும், சுப்பிரமணிய பிள்ளை, சுமார் ஆறு மாதங்களுக்கு முன்பு, இம்மருத்துவமனையில் 'ஹைட்ரோஸில்' அறுவைசிகிச்சை செய்து கொண்டவர். தான் பட்ட அவதியை அவர் சொல்லும்போது, ''ஜெனரல் வார்டில் படுத்திருந்ததை வாழ்நாளில் மறக்க முடியாதுங்க. குடிப்பதற்கு நல்ல தண்ணீர் கூடக் கிடைக்காமல், வெளியிலிருந்தும் பக்கத்திலுள்ள வீடுகளிலிருந்தும் தண்ணீர் பிடித்துத்தான் உபயோகித்தோம். என் கூடத் துணைக்கு ஓர் ஆள் இருந்ததால்... தண்ணீர் பிடிக்க முடிந்தது. எல்லோராலும் இப்படி முடியுமா? எப்படா 'டிஸ்சார்ஜாகி' வெளியே வருவோம்னுதான் ஒவ்வொரு நாளையும் கடத்தினேன். குற்றம் செய்தவங்களை ஜெயிலில் போடுறதைவிட பத்மனாபபுரம் மருத்துவமனையிலுள்ள ஜெனரல் வார்டில் படுக்க வைத்தால் போதுங்க...!'' என்று குறிப்பிட்டார்.

தக்கலையில் மேலும் ஐந்து தனியார் மருத்துவமனைகள் உள்ளன. அதில், தேசிய நெடுஞ்சாலையைத் தொட்டு அமைந்துள்ள 'ஜார்ஜ்' ஆஸ்பத்திரியின் கழிவுநீர், சாலையைத் தொட்டுச் செல்லும் ஓடை வழியாகப் போய், பொதுமக்கள் குளிக்கும் குளத்தில் சென்று கலக்கின்றது. இதுபற்றித் தக்கலை பத்தாவது வார்டு கவுன்சிலர் ஷாகுல் ஹமீது சொல்லும்போது, ''சாதாரணமாக, ஓர் ஆஸ்பத்திரியின் கழிவு நீரை, அம் மருத்துவமனை காம்பவுண்டுக்குள்ளேயே தான் 'டேங்க்' கட்டி விடுவார்கள். ஆனால், இந்த ஆஸ்பத்திரியில் மட்டுமே இப்படி, ரோட்டோரத்தில் கழிவுநீரை விடுகிறார்கள். இதுபற்றி நாங்கள் எவ்வளவோ சொல்லிப் பார்த்து விட்டோம். பலனில்லை. கவுன்சிலர் கூட்டத்தில் கூட, தீர்மானமும் நிறைவேற்றி விட்டோம், கழிவுநீரை வெளியே விடக் கூடாது என்று!'' என்றார்.

''அதற்கு, அம்மருத்துவமனையின் சொந்தக்காரர் என்ன சொல்கிறார்?''

''முதலில், அதை மாற்றி விடலாம் என்று சொன்னவர், பிறகு மறுத்துவிட்டார். ஸானிட்டரி இன்ஸ்பெக்டர் கூட வந்து பார்த்து விட்டு இதை மாற்றி விடுமாறு சொல்லி விட்டார்! இதுவரை ஒன்றும் நடக்கவில்லை!'' என்று சொல்லி முடித்தார், ஷாகுல் ஹமீது.

அங்கிருந்து சுமார் அரை கிலோ மீட்டர் தொலைவிலுள்ள குளத்தைச் சென்று பார்த்தோம். ஆஸ்பத்திரியிலிருந்து வெளிவருகின்ற கழிவுநீர் குளத்தை அடைவதற்குள்ளாகவே, நிலத்துள் ஊறிச் சென்று மறைந்து விடுகின்றது. இருப்பினும் மழைக்காலங்களில், தேங்கி நிற்கும் கழிவுகள் குளத்தை அடையச் சாத்தியக் கூறுகள் உள்ளன. இது சம்பந்தப்பட்ட மருத்துவமனையின் உரிமையாளரைச் சந்திக்க முயன்றோம். பலனளிக்கவில்லை.

நோயாளியாகக் காட்சி தரும் அரசு மருத்துவமனை, சரியான கவனிப்பின்றி சிதிலமடைந்து வரும் பத்மனாபபுரம் அரண்மனை, பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீர் இன்றித் தவிக்கும் மக்கள் — இதுதான் இன்றைய தக்கலையின் நிலைமை! தமிழக ஆட்சியே ஓர் ஆச்சரியமாக ஆகிவிட்ட போது, இதெல்லாம் ஓர் ஆச்சரியமா என்கிறீர்களா?

— பானு மணாளன்.

படங்கள்: ஆர். முரளிராஜாதரன்.

* விற்பனைக்குத் தயார் — ரப்பர் பால் டிரம்கள்.



டேர் மிகமோசமா பாதிக்கப் பட்டிருக்கு. கீரிப்பாறைல ஆலங்கேசம் ஏரியாவுக்கு அழைச்சிட்டுப் போய்க் காட்டச் சொல்லி அதிகாரிங் களைக் கேளுங்களேன்; மறுத் திடுவாங்க!

"அரசு ரப்பர் கழகம்னு அமைச்சு, ஒரு வருஷத்துக் குள்ள வனத்துறையைச் சேர்ந் தவங்களை வனத்துறைக்கே திருப்பி அனுப்பிடனும்னு உத் தரவு போட்டாங்க. இன்னி தேதிவரைக்கும் இதைச் செயல் படுத்தலே... ரப்பர் கழகத் தோட நிர்வாக அமைப்பை எப்படி மாத்தினு முன்னேற்றம் காணலாம்னு பரி

# அரசு ரப்பர் கழகமா?

கீரிப்பாறை: ஆரம்ப காலையிலும் அந்திநேரத்திலும் சாய்வான சூரியன், வரிசையாய் அணி வகுத்து நிற்கும் இந்தரப்பர் மரங்க ளினூடே எட்டிப் பார்க்கும் போது பூமியில் படியும் ஒளி-நிழல் அமைப் புக்கள், காமிரா டைரக்டர்களுக் குக் கவர்ச்சியான அழைப்புக்கள். பாரதிராஜா வந்தார், பாலு மகேந்திரா வருவாரென்றெல்லாம் பேச்சு. இந்தச் 'சினிமாப் புகழ்' எஸ்டேட்டில் சற்று இறக்கமான இடத்தில் ரப்பர் தொழிற்சாலை.



* சிமியோன்





* புகைந்து போன 'புகை வீடு!

புகைப்படம் எடுக்க நாங்கள் விரும்பியபோது முதலில் 'பெரிய மனத்து' டன் அனுமதி அளித்த வனத்துறை அதிகாரி, நாங்கள் தொழிலாளர்க ளுடன் பேசி, ஊழல் விவகாரங்கள் பற்றித் தக வல்கள் சேகரிக்க ஆரம்பித்தவுடன், கூப்பிட்டு அனுப்பி, "எங்கே உங்கள் அத்தாட்சி? கடிதம் எழுதிக் கொடுங்கள்" என்றெல்லாம் தட்டிக் கேட்டது தனி சுவாரஸ்யம்.

ரப்பர் கழகத்தைச் சேர்ந்தவர் அதிகாரி (தயவு செய்து என் பெயரை வெளியிட வேண்டாம்!) யிடமிருந்து திரட்டிய தகவல்கள்:

"புள்ளி விவரங்களுக்காக 4790 ஹெக் டேர்னு சொன்னாலும் சுமார் 1315 ஹெக் சீலிக்க ஜெனரல் மேனேஜர் சித்திரபு. ஒரு பிரேரணை தாக்கல் செய்தார். நேத்து. முந்தா நாள் இல்லே. 12.10.84 லியேயே டைரக் டர்ஸ் மீட்டிங்ல சொச் வனத்துறை தலைவர் கொண்டாஸ், கழகத்தோட எம்.டி. பத்மநாபன் ரெ பரையும் ஒரு கமிட்டியா நிர்வாகக் குழு நியமிச்சது. ஆனா இந்தக் கமிட்டி ஒரு நாள் கூட கூட்டப்படலே... அழிஞ்சு போன ரப்பர் தோட்டங்கள்ல மறு படியும் ரப்பரைப் பயிரிடணும்னு சித்திரபு இன்னொரு பிரேரணை கொண்டு வந்து. அதுக்காக அமைச்ச கமிட்டியும் ஒரு நாள் கூட கூட்டப்படலே. கீரிப்பாறைல இருக்கிற ரப்பர் தொழிற்சாலையில்தான் 90% ஊழல் நடக்குது....

அவர் கைகளை அகலமாய் விரித்துக் கண் களை உருட்டிக் காட்டி விட்டுத் தொடர்ந்



ரப்பர் பால் எடுக்கும் ஊழியர்.

* ரப்பர் தோட்டத் தொழிலாளர்.



# ஊழல் கழகமா?

தார்:

''வெளி நாட்டுலேர்ந்து லட்சக்கணக்கில் முதலீடு செய்து மெஷின் வாங்கியிருக்காங்க. மிக அதிகமான ஸ்பீடில வொர்க் பண்ற இந்த மெஷின்ல முக்கியமான பார்ட்லாம் ஆயில்லயே மூழ்கி இருக்கணும்.. ஆனா மிஷினுக்காக வாங்கின ஆயில், கிரீஸ்லாம் மிஷினுக்குப்போகாம,வெளியிலயாருக்கோ விற்கப்படுது. இல்லாட்டி இதற்கு பொறுப்பானவர் ஆயில் வாங்காமலேயே வவுச்சர் போட்டு பணத்தைச் சாப்பிட்டுடுவாரு... மெஷின் எப்படி ஒர்க் பண்ணும்? பிரேக்டவுனுகி உபயோகமில்லாம நிக்குது...

''உற்பத்தியாகற ரப்பரைப் பொது ஏலத்திலதான் விக்கணும். ஏலத்துக்கு வரவங்க முக்கால்வாசி கேரளா வியாபாரிங்க. அதிகாரிங்களைத் தனியா கவனிச்சுப்பாங்க. ஸ்க்ராப் ரப்பர் (**Scrap Rubber**) விற்பனைல எடை போடறப்ப விளையாடிடுவாங்க....''

''அதில என்ன ஊழல் பண்ண முடியும்?''

''தொழிலாளர்களைக் கேளுங்க. விளக்கமா சொல்வாங்க.''

தொழிற்சாலையை நாங்கள் சுற்றிப் பார்த்தோம். அங்கங்கே இயந்திரங்கள் திறந்து போடப்பட்டு மராமத்து வேலைகள் நடந்து கொண்டிருந்தன. ரப்பர் பால், வாளிகளில் வந்து கொண்டிருந்தன. சுமந்து வந்தார்கள் தொழிலாளிகள்.

இன்னொருபுறம் ஓர் அறை புகை படிந்து சிதிலமடைந்து கிடந்தது. **Smoke House** என்ற அறிவிப்பு.

''இருந்தமூணு ஸ்மோக் ஹவுஸ்ல ஒண்ணு ஒரு விபத்தில எரிஞ்சே போச்சு. எரிஞ்சு மூணு வருஷமாகுது.... இதுவரைக்கும் ரிப்பேரே செய்யலே.... ஒரு நாளைக்குக் கிட்டத்தட்ட ரெண்டு டன் உற்பத்தி பாதிக்கப்பட்டிருக்கு....''

ரப்பர் பாலைக் கொண்டு வரும் தொழிலாளர்கள் சற்று சந்தேகமான கண்களோடு எங்களைத் தாண்டிக் கொண்டு போனார்கள். ஊழல் விவகாரங்கள் இவர்களுக்குத் தெரியும் என்றார்களே! ஒருத்தரை நிறுத்தினோம். அறிமுகப்படுத்திக் கொண்டோம். விசாரித்தோம்.

''டேய் சத்யன், சிமியோன், எல்லோரும் வாங்கடா....'' என்று குரல் பறந்தது. நிமிடத்தில் எங்களைச் சூழ்ந்து கொண்டு எட்டு பத்துப் பேர். தலைப்பாகை, கைகளில் இரும்பு அல்லது துத்தநாக வாளிகள். அவற்றின் அடியில் தடிமனான கசண்டாய் ரப்பர் பால்.

''உங்களுக்கு ஏதாவது பிரச்னைகள் இருக்கா?''

''பிரச்னைகளுக்கென்ன... நெறைய இருக்குது. மேனேஜ்மெண்ட்ல பண்ற ஊழலைப் பார்த்துக்கிட்டிருக்கிறதே கஷ்டம்தானே...''

''என்ன ஊழல் பண்றாங்க?''

''லட்சக் கணக்கில பணம் போட்டு ஃபாக்டரியைச் சுத்தி கல் சுவர் காம்பவுண்ட் கட்டற வேலை நடக்குது. மூணு லாரி லோடு சிமெண்டை காண்ட்ராக்டர் கிட்ட மிரட்டிக் கையெழுத்து வாங்கி அதிகாரிங்க வெளி



* பெட்ரோலியம் எண்ணெயின் விலை ஏற்றத்திற்குப் பின் செயற்கை ரப்பர் தொழிற்சாலைகளில் ஒரு தேக்கம். எனவே இயற்கை ரப்பருக்குப் பழைய மவுசு. தமிழகத்தில் இயற்கை ரப்பர் எங்கே கிடைக்கும்? அதற்கேற்ற உன்னதமான மண்வளமும், உதவிகரமான சீதோஷ்ண நிலையும் ஒரே ஒரு இடத்தில் தான் உண்டு; கன்னியாகுமரி. * தமிழ்நாடு வனத்துறை 1960 ஆம் வருடம் இயற்கைக் காடுகளை அழித்து கன்னியாகுமரியில் ரப்பர் பயிரிடத் தொடங்கியது. அடுத்த ஐந்தாண்டுகளில் 1200 ஹெக்டேர் பரப்பிற்கு ரப்பர் மரங்கள் காலூன்றி விட்டன. இயற்கைக் காடுகளை அழிப்பதை நிறுத்த வேண்டும் என்று அரசாங்கம் சிவப்பு சிக்னல் கொடுத்தது. 1980 இல் புதிய ரப்பர் தோட்டங்களை உருவாக்குதல் நிறுத்தப்பட்டது. இன்றைய ரப்பர் தோட்டப் பரப்பளவு: 4785.70 ஹெக்டேர். * கீரிப்பாறை, பரலியாறு, மணலோடை, காளிகேசம், மயிலாறு, சித்தாறு, குற்றியாறு, கல்லாறு, மருதம்பாறை — கண்ணை மூடிக் கொண்டு திருப்பிச் சொல்லுங்கள் பார்ப்போம்! இந்த ஒன்பதும் ரப்பர்க் காடுகளின் பிரிவுகள். ரப்பர் உற்பத்தி கொழித்துக் கொண்டிருக்கும் இங்கே, ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு என்று ஒரு சிறிய அரசு ரப்பர் தொழிற்சாலை மட்டுமே. கிட்டத்தட்ட 1.5 கோடி வருமானம். 86ல் 14 லட்சம் லாபம் எதிர்பார்ப்பு. * சாதாரணமாகப் பயிரிடப்பட்ட ஏழாவது வருடத்திலிருந்து ரப்பர் தன் நன்றியுணர்வைத் தூய நிறப் பாலாகச் சுரக்கத் தயாராகிறது. இந்த நன்றியுணர்வு அதன் பதினைந்தாம் வயதில் உச்சமடைந்து ஒரு ஹெக்டேருக்கு 1250லிருந்து 2000 கிலோ வரை ரப்பர் கிடைக்கும். அரசு ரப்பர் தோட்டங்களில் பயிரிடப்பட்டுள்ள மரங்கள் உயர்ந்த இனம். ஆனாலும் ஹெக்டேர் ஒன்றுக்குச் சுமார் 525 கிலோ எடை ரப்பர்தான் கிடைக்கிறது. (குறை ரப்பரிடம் இல்லை. நிர்வாகத்திடம்தான் என்கிறார்கள்.) * ரப்பர் பால் எடுக்க உகந்த சீசன் மே மத்தியிலிருந்து அடுத்த மார்ச் வரை. கிட்டத்தட்ட 2000 தொழிலாளர்கள் தங்கும் குவார்ட்டர்ஸ், மருத்துவ வசதிகள், படிப்பு வசதிகள் எல்லாம் உண்டு. * வனத்துறையிடம் இருப்பதைவிடத் தனிக் கழகமாக மாற்றி, பொறுப்புகளைக் கொடுத்தால் நிர்வாகம் சீரடையும் என்ற எண்ணம் வந்ததும், பெரு முயற்சிகள் எடுக்கப்பட்டு 1.10.1984 முதல் 'அரசு ரப்பர் கழகம்' என்ற தனி அமைப்பின் கீழ் ரப்பர் தோட்டங்கள் கொண்டு வரப்பட்டன. ஆனால் இன்றும் முக்கிய அதிகாரிகளை வனத்துறை தான் நியமித்துத் தருகிறது. * ரப்பர் தோட்டங்களின் மேற்குப் பிரதேசத்தில் காட்டெருமைகள், யானைகள் இவற்றின் பிரவேசங்களைக் கட்டுப்படுத்த ஏராள செலவில் கிட்டத்தட்ட 500 ஹெக்டேர் பரப்பைச் சுற்றி மின்சார வேலி அமைத்திருக்கிறார்கள். இந்த வேலியில் உடல் பட்டதும் மிருகங்களுக்கு லேசான ஷாக் அடிக்கும். பயத்தில் அவை மறுபடி நெருங்கா.

மார்க்கெட்ல வித்துட்டாங்க நீங்களே பாருங்க....''

கல்சுவரைச் சுரண்டிக் காட்ட, பூச்சு பொலபொலவென்று மண்ணாய் உதிர்ந்தது.

''போன வருஷம் ஸ்க்ராப் ரப்பர் லோடு பண்றதில பயங்கர ஊழல் நடந்திச்சு. சாயந்திரம் அஞ்சு மணிக்கு மேல லோடு ஏத்தக் கூடாதுன்னு ரூல்ஸ் இருக்கு. ஆனா ராத்திரில நாலு லாரிகள்ல லோடு ஏத்தினாங்க. அதுவும் ஒவ்வொரு லாரிலயும் அதிகமான எடை ஏத்திட்டாங்க. விஷயம் தெரிஞ்சு ஓர் அதிகாரி லாரிங்களை மடக்கிட்டாரு. மடக்கின அதிகாரி பேரு வெங்கடசாமி. நாலு லாரியையும் நாகர்கோவிலுக்கு எடை போட எடுத்திட்டுப் போனாங்க.... முதல் லாரியிலேயே 136 கிலோ எடை கூடுதலா இருந்திச்சு. உடனே மத்த மூணு லாரியையும் எடை போடாமலேயே அனுப்பிட்டாங்க. லோடுங்க ஏத்தினது யாரு, போனது யாருக்குன்னு கூட சொல்ல முடியும்.''

''லோடு ஏத்தறப்ப நீங்களும் கூடத்தானே இருப்பீங்க-நீங்க தடுக்க முடியாதா?''

''தொழிலாளிக்கு நிர்வாகி எப்படிங்க? சாதாரண ஜனங்க பாம்புக் கூட்டுக்குள்ள தலை போட முடியாதுங்க. லாரிங்களைப் பிடிச்சாரே வெங்கடசாமி — அவர் கதி என்ன ஆச்சு? குலசேகரத்துக்கு மாத்தல் உத்தரவு போட்டுட்டாங்க. மாட்டிக்கிட்டவங்களுக்கு சஸ்பென்ஷன் ஆர்டர் வந்தாச்சுன்னு சொல்றாங்க. ஆனா இதுவரைக்கும் சஸ்பெண்ட் பண்ணலை. வந்து போய்க்கிட்டுத்தான் இருக்காங்க....''

சஸ்பெண்ட் செய்யப்பட்டவர்கள் இன்னும் வேலைக்கு வருவதற்குக் காரணம், ஆட்கள் போதாமைதான் என்கிறதாம் நிர்வாகம். இத்தனை பேர் வேலை செய்யும் இடத்தில் இரண்டு பேரை சஸ்பெண்ட் செய்தால் ஒன்றும் கெட்டுவிடாது என்பது இன்னொரு சாராரின் வாதம்.

''நாங்க ஆதாரமில்லாம எதுவும் பேசலேங்க'' என்றார்கள் தொழிலாளர்கள். ''ஜாஸ்தி லோடு ஏத்திட்டுப் போன லாரி நம்பரெல்லாம் தரோம். தேதி தரோம். குறிச்சுக்குங்க...''

குறித்துக் கொண்டோம்.

இவர்கள் யார் மீது குற்றம் சுமத்தினார்களோ, அந்த அலுவலர்கள் சிலரிடம் பேசினோம்.

''கதையை அப்படியே மாத்திட்டாங்க...'' என்றார் ஒருவர். ''உண்மையில அந்தத் தேதில வெங்கடசாமிக்குத்தான் லோடு ஏத்தற டியூட்டி. நேரத்தில வேலைக்கு வராம மெதுவா மத்தியானம் 12.45க்குத்தான் வந்தாரு.

## ஃபாரெக்ஸ்® முதன்முதல் தேர்வு!

## ஏனெனில் புதிய மேம்பட்ட ஃபாரெக்ஸ்® முதன்முதலாக திட உணவிற்கு மாறும் குழந்தைக்கென இன்றியமையாத உட்பொருள்கள் சரியான அளவுகளில் சேர்க்கப்பட்டதாகும்.

குழந்தையின் வளர்ச்சிக்கும் மென்மையான செரிக்கும் சக்திக் கெனவும் சரியான அளவில் புரதங்களும் கொழுப்புச் சத்துக்களும் அடங்கிய தாகும் ஃபாரெக்ஸ்.

குழந்தையின் இரத்தத்தை ஆரோக்கிய மாக வைக்க இதில் போதுமான அளவு இரும்புச் சத்தும் உள்ளது.

குழந்தையின் எலும்புகளும் பற்களும் திடமாக வளருவதற்கு உகந்த விகிதத்தில் கால்ஷியம்-ஃபாஸ்ஃபரஸ் அடங்கியதாகும் ஃபாரெக்ஸ்.

இவை தவிர, புதிய ஃபாரெக்ஸ் கலப் பதற்கு எளிதானது...சுவைமிக்கது.




புதிய மேம்பட்ட ஃபாரெக்ஸ்®

பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலந்து கொடுத்தால் போதும்.

1.10 க்கு ஒரு பார்ட்டிக்கு லோடு பண்ணிட்டு சாப்பிடப் போயிட்டாரு. 3.40 க்குத்தான் திரும்பி வந்தாரு. ரெண்டு லாரி அப்புறம் லோடு பண்ணினார். 4.30 க்கு நாலாவது லாரி பாதி லோடாயிட்டிருந்தபோது நிறுத்திட்டுக் கிளம்பிட்டாரு. இனிமே லோடு பண்ணமாட்டேன்னு சொல்லிட்டாரு. அப்புறம் D.F.O. எங்களைக் கூப்பிட்டு லோடு பண்ணச் சொன்னாரு. ராத்திரி 7 மணிக்கெல்லாம் அனுப்பிட்டோம். வொர்க்கர்ஸ் சொல்ற மாதிரி பத்து மணி ஆகலே... இது பொறுக்காம லாரிங்களை வழில மடக்கிட்டாங்க.''

''லாரில அதிக எடை இருந்தது உண்மையா, இல்லையா?'' என்று கேட்டோம்.

''இருந்தது. ஆனா 136 கிலோ, 100 கிலோன்றதெல்லாம் பொய். ஏதோ கொஞ்சம் அதிகமா இருந்தது. அவ்வளவுதான்.''

''பின்னே உங்க மேலே பழி சொல்ல என்ன காரணமிருக்க முடியும்?''

''எனக்கு குவார்ட்டர்ஸ் அலாட் ஆனபோது, அதே குவார்ட்டர்ஸ் வெங்கடசாமியும் வேணும்னு கேட்டாரு. எனக்கில்லாமப் போச்சு. அந்தத் தகராறுதான் இத்தனை பிரச்னைக்கும் காரணம்....!''

ஒருவழியாய் நாங்கள் கீரிப்பாறையை விட்டுப் புறப்பட்டோம்.

சந்தித்தவர்கள் — அதிகாரிகள், தொழிலாளர்கள் என்று — ஒவ்வொருவரும் அடுத்தவர் மீது அவதூறை வாரியிறைத்த வார்த்தைகள் மனத்தைச் சுற்றிச் சுற்றி வந்தன. வேதனை அளித்தன.

எஸ்டேட்டைக் கடந்து கொண்டு எங்கள் வண்டி 'சீறி'ச் சென்றபோது உச்சிவெளிச்சத்தில் அந்த ரம்மியமான காடு நிறைந்த ரகசியமாய்த் தெரிந்தது. இயற்கையின் இந்த அழகுக்கும், வனப்பிற்கும் பின்னால் சுயநலம் ஒன்றே குறியாய்ச் செயல்படும் மனிதர்களின் உட்பூசல்களும், அடுத்தவர் முதுகின் அழுக்கைச் சுட்டிக்காட்டும் அவலங்களும் ஒரு வேண்டாத கறையாய்ப் படிந்திருப்பது வேதனை.

---

**அரசு ரப்பர் கழக நிர்வாகத்தின் மேல் கூறப்பட்டுள்ள குற்றச்சாட்டுக்களுக்குக் கன்னியாகுமரி மாவட்ட கலெக்டர் முனீர் ஹோதாவின் முன்னிலையில் அரசு ரப்பர் கழக மானேஜிங் டைரக்டர் பத்மநாபன் தரும் விளக்கங்கள் கலெக்டர் பேட்டிக்குள் இருக்கின்றன**

---

# எல்லாம் ஒன்றே!



ஒரு சமயத்தில் கிறிஸ்தவப் பாதிரியார் ஒருவர் நபிகளைப் பார்க்க வந்தார். அந்தச் சமயத்தில் நபிகள் பள்ளி வாசலில் இருந்தார். இருவரும் நீண்ட நேரம் பேசிக் கொண்டு இருந்தார்கள். பாதிரியாருக்கு ஜெபம் செய்யும் நேரம் வந்துவிட்டது. வெளியே கனத்த மழை பெய்து கொண்டு இருந்தது. பாதிரியார் நாயகத்திடம், ''ஜெபம் செய்ய வேண்டும். பள்ளிவாசலுக்கு வெளியே சென்று ஜெபம் செய்துவிட்டு வருகிறேன்'' என்று விடை பெற முயன்றார். நபிகள் நாயகம் அவரைத் தடுத்து, ''நண்பரே! மழை கடுமையாகப் பெய்கிறது. பள்ளி வாசலின் ஒரு மூலையில் உங்கள் ஜெபத்தை செய்யலாமே'' என்று கேட்டுக் கொண்டார்.

பள்ளிவாசலில் இருந்த நபிகளின் நண்பர்கள் ஒரு கிறிஸ்தவரால் பள்ளிவாசலின் தூய்மை கெட்டுவிட்டது என்றார்கள். அதற்கு நபிகள் அமைதியாக, ''நண்பர்களே! ஆண்டவன் இருவர் இல்லை. ஆண்டவன் ஒருவனே! மதங்கள் எல்லாம் ஒன்றே! பிரிவுதான் வெவ்வேறு. மாதா கோவிலும் ஒன்றே. பள்ளிவாசலும் ஒன்றே! மனத் தூய்மை தான் உண்மையான பள்ளிவாசல்!'' என்று கூறினார்.

— லட்சுமி சிவம்


நமது உடைமை கண்ணகி கோயில் கேரளத்தில் இருக்கிறது..கிடக்கட்டும்..! தமிழ் இனத்துக்கே சொந்தமாக புரட்சித் தலைவர் புரட்சி ஆட்சியில் ஒரு புதிய கண்ணகி கோயிலை எழுப்புவோம்! ஸ்தபதியாரே!.. இன்றே, இக்கணமே பணி துவங்கட்டும்!.. வாழ்க, புரட்சித் தலைவர்!..
வீரப்பன்
தமிழகம்
நிதி


பாதல்
கிளிஸ்தான்.. கிளிஸ்தான்..
சீக்கிய பயங்கரவாதி
அது கிளி இல்லை!.. ஜாக்கிரதை!
பர்னாலா


நீங்க 'கயாராம்' இல்லை! டில்லிக்கு 'ஆயாராம்'!
டில்லி அமைச்சரவை
பஜன்லால் (கயாராம்)
பன்சிலால் (ஆயாராம்)



# கல்கி

1986 ஜூன் 15
மலர் 44 இதழ் 46
அக்ஷய ஆனி 1



## மாதிரிப் பள்ளிகளா? தந்திரப் பள்ளிகளா?

இருபத்தோராம் நூற்றாண்டுக்கு பாரத மக்கள் தயாராக வேண்டும் — ஒப்புக் கொள்கிறோம். 21 ஆம் நூற்றாண்டைச் சந்திக்க ஏற்ற விதத்தில் 70 கோடி மக்களையும் உருமாற்ற முடியாது போனாலும் 70 லட்சம் பேர்களையாவது உருவாக்க வேண்டும் — ஏற்றுக் கொள்கிறோம். அதற்காக மாவட்டத்துக்கு ஒரு மாதிரிப் பள்ளியை அமைக்கலாம் என்ற யோசனையும் வரவேற்கத்தக்கதே. இங்கு ஜாதி, மத, இனப் பாகுபாடுகளை ஒதுக்கி, திறமைக்கு மட்டுமே முக்கியத்துவம் தரப்படுமானால்; ஏழை, பணக்காரன் என்ற வேற்றுமையை அகற்றி இங்கு ஆற்றல் மிக்க ஏழைக்கும் அனுமதியும் உபகாரச் சம்பளமும் கிடைக்குமேயானால் அதைச் சுதந்திர இந்திய அரசியலின் மிகப் பெரிய அதிசயமாகவும் சாதனையாகவும் கருதி வாழ்த்தலாம்.

ஆனால் இந்த மாதிரிப் பள்ளிகளை ஹிந்தி திணிப்புக்கு ஓர் உபாயமாக மத்திய அரசு கருதித் தந்திரம் புரியுமானால், மற்ற மாநிலங்கள் எப்படியோ, தமிழகம் அதை நிச்சயம் எதிர்க்கும். கல்வி அமைச்சர் அரங்கநாயகம் மத்திய அரசின் இந்தத் தந்திரத்தை அம்பலப்படுத்தியுள்ளார். காலம் கடந்துவிட்ட பிறகு அழுது புலம்பாமல் விழிப்புடனிருந்து தக்க தருணத்தில் முன்னெச்சரிக்கையாகக் குரல் கொடுத்துள்ள கல்வி அமைச்சரை வாழ்த்துகிறோம்.

மாதிரிப் பள்ளிகள் என்ற இந்தத் தந்திரப் பள்ளிகளில் ஹிந்தித் திணிப்பு என்ற அநீதி மட்டுமின்றித் தாய்மொழிப் புறக்கணிப்பு என்ற கொடுமையும் கலந்திருக்கிறது. ஆம், இதில் பயிலும் குழந்தைகள் தாய்மொழியில் அல்லாது ஹிந்தியிலும் ஆங்கிலத்திலுமே பாடங்களைக் கற்றுக் கொள்வார்கள்! மும்மொழித் திட்டம் என்பது ஒப்புக்குத்தான். ஹிந்தி பேசும் மாநிலங்களுக்கு உண்மையில் இது இருமொழித் திட்டம்தான். அதே இருமொழித் திட்டம்தான் இந்த மாதிரிப் பள்ளிகளில் இந்தியா முழுவதும் அமுலாகப் போகிறது!

கல்வி என்பது பூகோளம், விஞ்ஞானம், கணிதம் போன்றவை மட்டுமல்ல. அந்தந்தப் பிராந்தியத்தின் பண்பாட்டினைப் பிரதிபலித்து, மாணவரிடையே அதனை உணர்த்தவும் வளர்க்கவும் வேண்டும். அதற்காகத்தான் கல்வித்துறையை மத்திய மாநில அரசுகள் இரண்டுக்கும் பொதுவானதாக அரசியல் சாசனம் பேசுகிறது. இந்த மாதிரிப் பள்ளிகள் மூலம் இத்துறையில் மாநில அரசுகளின் உரிமைகள் பறிக்கப்படுகின்றன; கருத்துக்கள் அலட்சியப்படுத்தப்படுகின்றன.

தபால் துறையில் ஹிந்தியைத் திணித்தீர்கள்; வங்கிகளில் திணித்தீர்கள்; ரயில்வேயில் திணித்தீர்கள்; டெலிவிஷனில் திணித்தீர்கள்; மத்திய அரசு அலுவலகங்களில் ஆசை காட்டியும் அச்சுறுத்தியும் திணித்தீர்கள்; இன்னும் பலவகையாகவும் திணித்தது போதாமல் இப்போது கல்வித் துறையில் கைவைக்கப் பார்க்கிறீர்கள். தோலைக் கடித்து, துருத்தியைக் கடித்து, ஆட்டைக் கடித்து, மாட்டைக் கடித்து இப்போது இடையனையே கடிக்கப் பார்க்கிறீர்கள்!

நாங்கள் ஹிந்திக்கு விரோதிகள் அல்ல. பாரத நாட்டின் இதர மொழிகளைப் போல் அதற்குச் சம அந்தஸ்து கொடுங்கள், ஏற்கிறோம். உயர் அந்தஸ்து தருவதானால் எதிர்க்கிறோம், அவ்வளவே. மாநிலங்களில் பிரதேச மொழியான தாய்மொழி ஆட்சி செலுத்தும்; மாநிலங்களுக்கிடையே உறவுக்கும் மத்திய மாநில உறவுக்கும் அகில உலகத் தொடர்புக்கும் ஆங்கிலம் பயன்படும். இதுவே எங்கள் கொள்கை. பாரத மக்கள் அனைவருக்கும் தராசு முனை நியாயம் இதுவே.

ஹிந்தியை யாரும் விரும்பிக் கற்பதை நாம் எதிர்க்கவில்லை. ஹிந்தி மட்டுமென்ன பிரெஞ்சு, ஜெர்மன், மலையாளம், சம்ஸ்கிருதம் என்று எந்த மொழியை வேண்டுமானாலும் மூன்றாவது மொழியாகத் தேவைப்படுகிறவர்கள் பயிலட்டும். யாரும் தடுக்கப் போவதில்லை. நான்கு, ஐந்து மொழிகள் வேண்டுமானாலும் கற்கட்டும் ஆட்சேபணை இல்லை.

ஆனால் ஹிந்தி ஏகாதிபத்தியம் செலுத்த, மற்ற பாரத நாட்டு மொழிகள் அதற்கு அடிபணிந்து கிடக்க, அம்மொழிகள் பேசும் மக்கள் இரண்டாந்தரப் பிரஜைகளாக்கப் படுவதை யார் சகித்தாலும் தமிழன் சகிக்க மாட்டான். எச்சரிக்கிறோம், இந்தியாவிலும் படிப்படியாக ஓர் இலங்கைப் பிரச்னையை உருவாக்காதீர்கள்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

* கல்கியின் தஞ்சை மாவட்ட மலரில் குறிப்பிடப்பட்டவாறு, தற்போது திருமலை சமுத்திரத்தில் எல்லா பஸ்களும் நின்று போகின்றன.

மேலும், ஆதிவிடங்கம் கிராமத்திற்குச் சாலை வசதிகள் செய்யப்பட்டு வருகின்றன.

தஞ்சாவூர்,
பொ. நடனசிகாமணி.

* மருத்துவமனைகளில் நடக்கும் அராஜகங்கள் பற்றி அவ்வப்போது செய்தித்தாள்களில் படித்த போதும், பலர் கூறக் காதால் கேட்ட போதும் ஏற்படாத ஓர் அதிர்ச்சி 'கு. க. திட்டம் குடிகெடுக்கவும் கூடும்' கட்டுரையைப் படித்த போது ஏற்பட்டது! வித்தியாசமான ஒரு மருத்துவக் கட்டுரையைப் படித்த திருப்தியும் ஏற்பட்டது!

ஒண்டிப்புதூர்,
கா. சு. வேலாயுதன்.

* நிர்ணயித்த இலக்கை எட்ட வேண்டும் என்பதற்காக, கு. க. அறுவையில் மாணவாரி மகசூல் பெற நினைக்கும் அரசின் போக்கு கண்டனத்திற்குரியது! தக்க சமயத்தில் சுட்டிக்காட்டிய கல்கியின் பணி பாராட்டுக்குரியது.

குடியாத்தம் — 2,
செல்வி. என். ராதிகா.

* கல்கியில் ஓர் அதிசயம்! மூன்று சிறுகதைகள்! மூன்று சிறுகதைகளும் முத்தானவை, சத்தானவை, உண்மைக்கும் உள்ளத்தின் உணர்ச்சிகளுக்கும் வித்தானவை.

சேலம்—4,
கொடுமுடி கணேசன்.

* 'ரிட்பெட்டிஷன்' கோபாலனின் பொதுநலப் பணிகள் தொடரட்டும்! அநியாயங்கள், முறைகேடுகள் கண் முன்னே நடைபெறுவதைக் கண்டும், அவற்றை எதிர்த்துப் போரிட முடியாமல், வெறும் ஏக்கப் பெருமூச்சு விடுவதோடு நிறுத்திக்கொள்ளும் தமிழக மக்களிடையே, நீதிக்காகப் போராடும் கோபாலனின் துணிச்சலை மனதாரப் பாராட்டுகிறேன்!

சிறுமுகை, ஜி. கதிரேசன்.

* 'எரி தழல் கொண்டு வா' என்ற (பாரதியின்) சத்தியாவேச வார்த்தைகளை இந்த இதழ்த்தலையங்கம் பிரதிபலித்தது. அடங்கியிருக்கும் சீற்றத்தின் வெளிப்பாடான ஜெயவஞ்சன வார்த்தைப் பிரயோகம் எண்ணற்ற தமிழர்களின் குமுறல்.

ஸ்ரீரங்கம், ஆர். ஸ்ரீநிவாசன்

* 'லஞ்ச ஊழலைத் தவிர்ப்பது மேலே இருந்து வர வேண்டும். முதலில் மந்திரிகளும், சட்டசபை அங்கத்தினர்களும் முன் உதாரணமாக இருந்து காட்ட வேண்டும்' — என்ற அஸ்ஸாம் முதல்வர் மஹந்தாவின் கூற்றுஎன்னைமிகவும்கவர்ந்தது. இளைஞர்களிடையே இம்மாதிரியான எண்ணம் இருப்பது அதிசயம். லஞ்ச ஊழலை ஒழிக்க என்ன செய்ய வேண்டும் என்பதை மஹந்தா சரியாகப் புரிந்து கொண்டிருக்கிறார்!

சென்னை — 5,
எஸ். வி. ராஜசேகர்.

* வாசகர் குமுறலில் வெளியான 'சென்னைப் பல்கலைக்கழகத்தின் உலக ஸாவிய சாதனை'யைப் படித்தேன். இதோ இன்னொன்று: **Geology** என்ற பாடத்திற்கு ஆங்கில விளக்கம் **'Earth Science'** என்பதாகும். இதற்கு பிரசிடென்ஸி காலேஜ் நிலப்பொதியியல் என்றும், தேசியக்கல்லூரி மண்ணியல் என்றும், அரசினர் கல்லூரி சேலம், புவியமைப்பியல் என்றும் தமிழில்பெயர்வைத்துள்ளனர். ஆனால் எனக்குப் பல்கலைக்கழகம் கொடுத்த பட்டமோ கனிமவியல்என்கிறது! ஒரே பல்கலைக்கழகத்தின் கீழிருக்கும் கல்லூரிகளில் எப்படி இப்படியொரு பெயர்க் குழப்பம் வந்தது?

கொப்பம்பட்டி,
செ. அன்பு மதியழகன்.

* கை தட்டுவதில் உலக சாதனை புரிய நான் எடுத்துக் கொண்ட முயற்சிகளைப் பற்றி 2.2.86 கல்கி இதழில் வெளியிட்டிருந்தீர்கள். எனது சாதனை கின்னஸ் நிறுவனத்தால் அங்கீகரிக்கப்பட்டு; எனது பெயர் கின்னஸ் உலக சாதனை நூலில் சேர்த்துக் கொள்ளப்படவிருக்கிறது. சான்றிதழ் ஒன்றையும் அந்நிறுவனத்தார் அனுப்பியுள்ளனர் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

வேப்பூர், வி. ஜெயராமன்.



கல்கி சொன்னது; காரியம் நடக்குது!

# கடலோடி வந்த கண்ணம்மா...
# மலையோடி வந்த மண்டைக்காட்டம்மா...



* கண்பார்.

* சிறுவர்கள் சிலர் இயற்கையாக அமைந்திருந்த மண் புற்றை எட்டி உதைத்து விளையாடப் புற்றிலிருந்து ரத்தம் கசிந்ததால் அந்த இடம் தெய்வீக அந்தஸ்து பெற்று, பகவதி அம்மன் கோவிலாகஸ்தாபிக்கப்பட்டதாகச்சொல்கிறார்கள்.

மண்டைக் காட்டைச் சேர்ந்த உள்ளூர் மக்கள்.

* இந்த மண்டைக்காடு கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள குளச்சல் என்னும் கடற்கரைக் கிராமத்திலிருந்து மூன்று கிலோ மீட்டர் தூரத்தில் கடற்கரை ஓரத்தில் அமைந்திருக்கிறது.



* பகவதி அம்மன் திருக்கோயில்.



* ஜயப்பன்.

* ஸ்ரீ சக்ர பூஜை செய்த பைரவர் சமாதி இந்தப் பகவதி அம்மன் கோயிலில் இருக்கிறது.

* கேரள பாணிக் கோயில் என்பது அதன் அமைப்பைப் பார்த்தாலே விளங்கிவிடும். கர்ப்பக்



* துப்பாக்கிச் சூடு நடந்த இடம்.

கிருஹத்தில் இருபுறமும் முட்டுக் கொடுத்து மூன்றாள் உயரம் இருக்கும் புற்று. புற்றிலேயே ஒரு மணல் முக அமைப்பு. அப்புறம் கம்பீரமான உற்சவ பகவதி. கண்கள் — மைக்கடல். காதுகள் — தோடுகள். ஆயுதம் ஏந்திய, ஏந்தாத நான்கு கரங்கள். பகவதிக்கு இருபுறக் காவல், அரை ஆள் உயரக் குத்து விளக்குகள். முகப்பில் நூற்றுக்கணக்கான அகல் விளக்குத் தோரணங்களுடன் மரவாயில். கொடுக்கப்படும் சந்தனப் பிரசாதத்தில் கூடச் சேர நாட்டு வாசனை.

* மாசி மாதத்தில் ஒரு விழா. நாற்பது நாள் விரதமிருந்து, இருமுடி சுமந்து இங்கே வந்து கடலில் குளித்து, 'சரணம் தா தேவியே, சரணம் தா பொன்னு பகவதியே' என்று பகவதியைச் சரணடைந்து, பொங்கல் இடும் விழா. கேரளா முழுக்கத் திரண்டு வருகிறது. ஆறு லட்சம் பேர், ஏழு லட்சம் பேர் என்று லகர வரிசையில்தான் பக்தர்கள் எண்ணிக்கை. அந்த விரதமிருந்து பூஜை செய்தால், என்ன நோயாக இருந்தாலும் பகவதி தீர்த்து வைப்பாள் என்ற நம்பிக்கை வேரூன்றியிருப்பதால், ஹிந்துக்கள், கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள் என்று அனைத்து மதத்தினரும் வருகை புரிகின்றனர். 'ஹிந்துக்கள் அல்லாதவர் இந்த எல்லைக்கு மேல் போகக் கூடாது' என்ற போர்டு இல்லாத கோயில் இது.

ஒடுக்கு பூஜை எனப்படும் இன்னொரு விசேஷ பூஜையும் நடைபெறும். இரவு பத்து மணிக்குப் பலவகைப் பதார்த்தங்கள் செய்து எடுத்து வந்து அம்மனுக்குப் படைத்துப் பலி கொடுப்பார்கள். முன்பெல்லாம் பலி ஆடு, கோழி என்று இருந்தது. இப்போது அப்படியின்றிப் பலி கொடுக்கும் சடங்குக்காகத் தடியன்காய் என்ற ஒரு காயின் மேல் சுண்ணாம்பு தடவி நெட்டுக் குத்தாக வெட்ட, அதிலிருந்து செந்நீர் பீய்ச்சி அடிக்கிறது. அந்தச் சடங்கின் போது பக்தர்கள் மூச்சுக் கூட விட மறந்து போவார்கள். பகவதி அம்மனும் இந்தப் பலியை விரும்பி ஏற்றுத் திருப்தி அடைகிறாள்.

வாசகர்கள் எழுதிய கடிதங்களின் அடிப்படையில் கன்னியாகுமரி மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்து பல்வேறு மக்களைச் சந்தித்துப் பேட்டிகளும் கட்டுரைகளும் வழங்குகிறவர்கள்:

சுரேஷ் — பாலா

புகைப்படங்கள்: மனோ

மேலட்டை வண்ணப்படம்: என். பிரபாகர்.

* ஒரு வருடத்துக்குச் சுமார் ஏழு லட்சம் வருமானம் இருந்தும் இந்த மண்டைக் காட்டில் ஒரு ரெஸ்ட் ஹவுஸ் இல்லை. விழாச் சமயங்களில் சுகாதார வசதி எதுவும் பிரமாதமாயிராது. நூற்றுக் கணக்கான கல்யாணங்கள் இக்கோயிலின் முன் மண்டபத்தில் நடக்கின்றன. ஒரு கல்யாண மண்டபம் கட்டினால் பரவாயில்லை. இந்தியன் எக்ஸ்பிரஸின் கரெஸ்பாண்டென்ட்டாகப் பணிபுரியும் ஐயப்பன்தான் மேற்கண்ட ஸ்தல புராணக் கதையிலிருந்து கல்யாண மண்டபம் வரை எடுத்துச் சொன்னவர்.

* பகவதி அம்மன் கோயிலில் இருந்து ஐந்து நிமிட நடை கடற்கரைக்கு. விழாவிற்கு வரும் மக்கள் புனித நீராடும் கடற்கரை. நாங்கள் போன நேரம் கருவாட்டுக்காக மீன்கள் வெயிலில் வாடிக் கொண்டிருந்தன. கடற்கரை நெடுக மீனவர்கள், கட்டுமரங்கள், வலைகள், மீன்கள் என்று தொழிலில் சிரத்தையாக இருந்தார்கள்.

* 1982 இல் மதக்கலவரமும்; துப்பாக்கிச் சூடும் நடந்து ஆறு பேர் உயிரிழந்த அந்தச் சரித்திரப் புகழ்பெற்ற இடத்தைப் பார்த்தோம். 1985 இல் லேசாக ஒரு மோதல் ஏற்பட்டு அடங்கிப் போயிருக்கிறது.

* சமாதானக் குழுத் தலைவர்களில் ஒருவரான கஸ்பார் அங்கேதான் இருந்தார். அவரைச் சந்தித்தோம். "கடலில் குளிக்கும் போது கோஷம் போடக் கூடாது என்று கட்டுப்பாடு. அதைக் கடைப்பிடிப்பது உத்தமம். அப்படியே கோஷம் போட்டாலும், தங்கள் மதத்தைப் போற்றும் கோஷமாக இருக்கலாமே தவிர மற்றொரு மதத்தைத் தூற்றும் கோஷமாக இருக்கக் கூடாது. இதில் கவனம் செலுத்தினால் கலவரமே நேராது. ஒரு இளைஞர் மன்றம் அமைத்து அதில் ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்துவ மதத்தினர் அனைவரும் ஒன்று சேர்ந்து இனி கலவரம் நேராதபடி பார்த்துக் கொள்ளப் போகிறோம்" என்றார் அவர்.

* கடற்கரையோரத்தில் ஒரு சர்ச். அந்த சர்ச்சில் உள்ள தாய் செயின்ட் லூஷியா. அங்குள்ள கிறிஸ்தவ மக்கள் அவளைக் 'கண்ணம்மா' என்று அன்புடன் அழைக்கின்றனர். கடலில் மிதந்து வந்து ஸ்தாபிதம் ஆனவள் என்பதால் 'கடலோடி வந்த கண்ணம்மா' என்று பெயர் பெற்றவள். இந்தக் கடலோடி வந்த கண்ணம்மாவும், மலையோடி வந்த மண்டைக் காட்டம்மாளும் அக்கா தங்கைகளாம். ஹிந்துக்களும் சர்ச்சுக்கு வந்து காணிக்கை செலுத்துகிறார்கள்.

* அக்காவும், தங்கையும் ஆட்சிபுரியும் இடம் மண்டைக்காடு. அவர்கள் இருவரும் ஒற்றுமையாகத்தானிருக்கிறார்கள். அந்த ஒற்றுமையைத்தான் நாமும் கற்றுக் கொள்ளவேண்டும். மதவேறுபாடின்றிச் சகோதரத்துவம் நிலவ முயற்சி செய்ய வேண்டும்.

உ

திருச்சிற்றம்பலம்

## அருள்மிகு ஸ்ரீ மங்கள நாயகி சமேத
## ஸ்ரீ வாஞ்சிநாத சுவாமி திருக்கோயில்
## திருவாஞ்சியம்—610 110

நன்னிலம் வட்டம், தஞ்சை மாவட்டம்

### திருப்பணிக் கமிட்டியினர் வேண்டுகோள்

சோழ மண்டலத்தில் புண்ய நதியான காவேரியின் தென்கரையில் விளங்குவதும் முக்தி ஸ்தலமான காசிக்கு ஸமமாக புராணங்களில் போற்றப்படுவதுமான ஸ்ரீவாஞ்சியம் என்னும் ஸ்தலம், ஸ்தலம், மூர்த்தி, தீர்த்தம் மூன்றிலும் சிறப்பு பெற்றது. இங்கு கோயிற் கொண்டிருக்கும் ஸ்ரீ மங்கள நாயகி ஸமேத ஸ்ரீவாஞ்சி நாதேச்வரர், சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், அருணகிரியார் இந்த சிறந்த பக்தர்களால் பாடப் பெற்றிருக்கிறார். மற்றும் அம்பாள், யமதர்மராஜன் இவர்களால் பூஜிக்கப்பட்ட பெருமையுடையவராயுமிருக்கிறார்; யமதர்மராஜனுக்கு தனி ஸன்னதி இருக்கிறது. இங்குள்ள குப்த கங்கை என்னும் தீர்த்தத்தில் கார்த்திகை ஞாயிறு முதலிய விசேஷ தினங்களில் ஸ்னானம் செய்வது உயர்ந்த பலன்களை அளிப்பதாக புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஞானாசிரியர்களாலும், வாக்குவித்தகர்களாலும் பாடிப் புகழ் பரவப் பெற்ற இத்திருத்தலத்தின் சீர்மிகு ஆலயத்திற்கு நிகழும் அக்ஷய ஆண்டு ஆவணி மாதம் திருக்குட முழுக்குப் பெருஞ்சாந்தி நிகழ்த்த ஸ்ரீகாஞ்சி காமகோடி பீட முப்பெரும் ஞானஜோதிகளாம் ஸ்ரீ சங்கராச்சார்யர்களுடைய அருளாசியுடன் திட்டமிடப்பட்டு, இப்பெரும் திருப்பணி தொடங்கப்பட்டுள்ளது. முக்திப்பேற்றில் காசியையும் விஞ்சும் இப்புனித ஸ்தலத்தின் ஆலயக் குடமுழுக்குத் திருப்பணி இனிது நிறைவேற ஆஸ்திக அன்பர்கள் தங்களாலியன்ற நல்லுதவிகள் அனைத்தும் செய்து அருள் மிகு ஸ்ரீ மங்கள நாயகி சமேத ஸ்ரீ வாஞ்சிநாதரின் பெருங்கருணைக்குப் பாத்திரர்களாகும்படி பிரார்த்திக்கிறோம்.

அன்புடன்,

நிர்வாக அதிகாரி,
திருப்பணிக் கமிட்டியினர்

---

# எம்.ஜி.ஆரின் அடுத்த ஒழிப்பு என்னவாக இருக்கும்?

நீங்கள் கேட்டவை — தராசு

* ப. மூர்த்தி, பெங்களூர் — 21.

? மாண்புமிகு ஆர். எம். வீ. யும் கலைஞர் கருணாநிதியும் வரப் போகும் இடைத் தேர்தலில் ஒரே தொகுதியில் போட்டியிட்டால் எப்படியிருக்கும்?

! கொடுத்து வைத்த தொகுதி அது! உடனடியாக அந்தத் தொகுதியிலுள்ள அத்தனை கிராமங்களிலும் சந்துக்குச் சந்து தண்ணீர் பைப் போடுவார்கள்; ரோடு போடுவார்கள்; பஸ் விடுவார்கள்... இன்னும் என்னென்னவோ செய்வார்கள். தேர்தல் முடிந்த பிறகு யார் அந்தத் தொகுதியைச் சீந்தப் போகிறார்கள் என்பது வேறு விஷயம்!

* பி. இராமகிருஷ்ணன், மேலகிருஷ்ணன் புதூர்.

? நர்ஸரிப் பள்ளிகளில் கூட அட்மிஷன் வாங்கக் கஷ்டமாக இருக்கிறதே. என்ன செய்யலாம்?

! ஒரு நண்பர் நர்ஸரி ஸ்கூல் அட்மிஷனுக்காகத் தன் குழந்தையைக் கூட்டிக் கொண்டு சென்றபோது, ஐந்தாயிரம் ரூபாய் நன்கொடை கேட்டார்களாம். உடனே அந்த நண்பர், 'உங்களிடம் ஐயாயிரம் கொடுப்பதைவிட என் குழந்தைக்காக நானே ஒரு நர்ஸரி ஸ்கூல் ஆரம்பித்துவிடலாம் போல் இருக்கிறது!' என்றாராம். அந்த அளவுக்குக் கொள்ளை நடக்கிறது.

* கே. வி. எஸ். மணியன், குடியாத்தம்.

? எம். ஜி. ஆரின் அடுத்த ஒழிப்பு என்னவாக இருக்கும்?

! அ. இ. அ. தி. மு. க.?

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்.

? . நம் இந்தியாவை ஆள்பவர் நேருவின் பேரனா? இந்திராவின் மகனா?

! நல்லவேளை! 'ஸோனியாவின் கணவரா அல்லது ராகுல், பிரியங்காவின் தந்தையா?' என்று கேட்காமல் விட்டீர்களே! அதுவரைக்கும் சந்தோஷம்தான்.

* டி. விஜயகுமார், கொப்பம்பட்டி.

? ஆர். எம். வீரப்பன், இந்தியாவிலேயே எல்லாத் துறைகளிலும் தமிழகம் சிறந்து விளங்குகிறது என்று கூறியுள்ளாரே?

! சத்யா மூவிஸ்காரராயிற்றே! அதனால்தான் அவருக்கு இப்படியெல்லாம் மசாலாக் கதை சொல்லத் தெரிந்திருக்கிறது.



* பிளேன் ரகுபதி.



* உலகிற் சிறந்தவர்?



* இவருக்கும் பதவி!

* கோ. சு. க்ரேஷ், கோவை — 9.

? 'ரேஸ் எகெய்ன்ஸ்ட் டைம்' நாளில் தங்களைக் கவர்ந்தது?

! ஓட்டக்காரர்களை முந்திக் கொண்டு முன்னால் ஓடி ஓடிப் படமெடுத்த புகைப்படக் காரர்கள் என்னைக் கவர்ந்தார்கள் என்றால், வயசுப் பெண்கள் ஓடிவரும்போது மட்டும் அளவுக்கு அதிகமாகக் கைதட்டிக் கிண்டல் செய்த பார்வையாளர்கள் ரொம்பவும் என்னை வேதனைப்படுத்தினார்கள்.

* சலீம் தமீஜுதீன், நெல்லிக்குப்பம்.

? கமல் அகில உலகச் சிறந்த நடிகராகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என அமைச்சர் அரங்கநாயகம் பேசியிருப்பது பற்றி?

! பாவம்! அரங்கநாயகத்திற்கு வேற்று மொழிப் படங்கள் பற்றி ஒன்றுமே தெரியாது போல் இருக்கிறது.

* நா. இரகுநாதன், சின்னங்குப்பம்.

? 'எம். ஜி. ஆர். என் கையில்; அரங்கநாயகம் என் பையில்' என்று தமிழ்நாட்டில் உள்ள ஒரு தனியார் பாலிடெக்னிக் நிர்வாகம் கூறுகிறதே?

! லட்சக்கணக்கில் லஞ்சம் கொடுப்பதற்குத் தயாராக இருந்தால் மட்டும் இப்படிப் பேசிவிடுகிற துணிவு வந்துவிடாது. வாங்கிக் கொள்ள ஆட்சியிலுள்ள பலர் தயாராக இருக்கும் போதுதான் இப்படிக் கூறுகிற துணிவு ஏற்பட முடியும். எனவே இப்படி வெளிப்படையாகப் பேசுகிறார்கள் என்றால் அந்த அளவுக்கு இந்த ஆட்சி சீர் கெட்டிருக்கிறது என்று அர்த்தம்.

* கே. எஸ். எஸ். மணியன், சென்னை — 53.

? மறைந்த புல்லாங்குழல் வித்வான் மாலி பற்றி...?

! தேவகானம் என்று கேள்விப்பட்ட வார்த்தைக்குத் தமது புல்லாங்குழலால் அர்த்தம் சொன்னவர் அவர்தான். புல்லாங்குழல் என்று ஒன்று இருக்கும் வரை மாலி இருப்பார். அப்படியிருக்கும்போது அவர் மறைந்து விட்டார் என்று சொன்னால் அது எப்படி ஸார் உண்மையாகும்?

* ரஜினிகுமார், சென்னை — 11.

? ஒரு நடிகையைக் கர்நாடக அமைச்சர் ரகுபதி திடீர் திருமணம் செய்து கொண்டதைப் பற்றித் தங்களின் கணிப்பு?

! மற்ற சில அமைச்சர்களைப் போல் அல்லாமல் அவர் வெளிப்படையாக ஆர்த்தியைத் திருமணம் செய்துகொண்டது கௌரவமான விஷயம்தானே! மனமாரப் பாராட்டி வாழ்த்துவதுதான் பண்பாடு.

* ஹெச். கே. நாசர், தோப்புத்துறை.

? பஞ்சாப் சிக்கலை அலச ஜெகஜீவன்ராம் தலைமையில் எட்டுப் பேர் கொண்ட குழு ஒன்று நியமிக்கப்பட்டுள்ளதே?

! ! அட, ஜெகஜீவன்ராமுக்கும் ஒரு பதவி தரப்பட்டு விட்டது!

* ப. விஜயபாலன், பம்பாய் — 23.

? காதலித்ததுண்டா?

! இறந்த காலத்தில் மட்டுமல்ல; நிகழ் காலத்திலும் உண்டு! உண்டு!! ஆம்; மனித குலத்தையே காதலிப்பவன் நான்.

* ரூ. 10 பரிசு பெறுபவர்:

பி. ராமகிருஷ்ணன்,
மேலகிருஷ்ணன்புதூர்,
பள்ளம் போஸ்டு,
— 629 601 (குமரி மா.வ.)


* 'கையில்?'
* 'பையில்?'


* இடைத்தேர்தலில்...
* ...ஒரே தொகுதியில்?

# பலமான பாதுகாப்புச் சின்னம்

ARASU

# அரசு

## அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள்

தமிழ்நாடு சிமெண்ட்ஸ் கார்ப்பரேஷன் (டான்செம்) கட்டிடப் பொருட்களுக்கு ஒரு புதிய பரிமாணம் படைத்துள்ளது. அதன் பெயர் நம்பிக்கை. அரசு அஸ்பெஸ்டாஸ் தகடுகள் உங்கள் நம்பிக்கைக்கு உறுதி அளிக்கின்றன. மழை, காற்று, தீ, பூச்சிகள் எவையும் பாதிக்காத பலமான பாதுகாப்பு தருகின்றன.

**அரசு : உயர்தர உழைப்பின் உறுதியான சின்னம்**

**தமிழ்நாடு சிமெண்ட்ஸ் கார்ப்பரேஷன் லிமிடெட்**




(ஒரு தமிழ்நாடு அரசு நிறுவனம்)
735 அண்ணா சாலை,
சென்னை 600 002.
தொலைபேசி: 89161 (4 இணைப்புகள்)
டெலக்ஸ்: MS 6080

- **தொழிற்சாலை:**
  அரியலூர் 621 704.
  ஆலங்குளம் 626 127.
  மாயனூர் 636 108, தமிழ்நாடு.
- **பெங்களூர் டெப்போ:**
  19E, மைசூர் டிவியேஷன் ரோடு.
  பெங்களூர் 560 023. போன்: 357659
- **எர்ணாகுளம் டெப்போ:**
  மே பா கேரளா ஸ்டேட் வேர்ஹவுஸிங் கார்ப்பரேஷன் திருப்புனித்துரா,
  எர்ணாகுளம் (மாவட்டம்) போன்: 7965
- **புனலூர் டெப்போ:**
  VIII/9, ரயில்வே ரோடு புனலூர்,
  கொல்லம் (மாவட்டம்).

DIPR/17423/363/86 ADWAVE/TANCEM/3080 A



# பூக்களைப் பறிக்காதீர்கள்

நதியாவை எடுத்துக் கொள்ளுங்கள். கல்லூரிப் பெண்களுக்கு வேண்டிய துடுக்குடன் சைக்கிள் ரேஸ், குண்டுத் தோழியைக் கிண்டல் செய்தல், பெயர் தெரியாதவனிடமிருந்து வந்த காதல் பரிசுக்கு ஹெட்மிஸ்ட்ரஸ் ரூமில் அழுகை என்று ஜமாய்க்கிறார். பெற்றோரிடம் கொஞ்சூண்டு பயமும், தன் விருப்பத்திற்கு மாறாய் அவர்கள் நடந்து கொள்ளும் போது, கோப சோகமும் காட்டத் தெரிந்து கொண்டிருக்கிறார். காதலனிடம் குழைவும், நெருக்கமும், வெட்கமும், கட்டாயப் பிரிவின் போது குமைந்து போய் அழுதலும், கடைசியில் சேரப் போகிறோம் என்ற நம்பிக்கையில் பரபரப்பும் வெளிப்படுத்துகிறார். உணர்ச்சிகரமான கட்டங்களில் க்ளோஸ் அப்பிலிருந்து காமிரா தூர விலக வேண்டிய துர்ப்பாக்கியம் நதியாவுக்கு இல்லை.

பத்திரிகை காமிராவைக் 'க்ளிக்' செய்ய ஆரம்பித்து, ஒரு ஃப்ரேமில் நதியா சிக்கிய பின் அத்தனை 'க்ளிக்'கிலும் அவரையே பின் தொடர்ந்து காமிராவிலும், நெஞ்சிலும் சிறைப்படுத்தி, காதலின் சிறகுகள் முறிக்கப்படும் போது நொந்து, துக்கத்தைக் கண்களில் சுமக்க சுரேஷுக்கு முடிந்திருக்கிறது.

நதியாவின் அப்பா வேஷம் வினுசக்கரவர்த்திக்கு. அடுத்த கொம்பில் இன்னும் அதிகமாய்ப் பழுத்த பழம் இருக்கிறதே என்று கிளைக்குக் கிளை பேராசையோடு தாவும் பாத்திரம். ஆரம்பத்திலிருந்தே நறுவிசாய் இந்தப் பாத்திரத்திற்கு மெருகூட்டும் கதை.

ராஜீவ், வி. கே. ஆர்., மனோரமா, எஸ்.எஸ். சந்திரன், செந்தில் என்று எல்லோருமே சிறப்பாய்ச் செய்திருக்கிறார்கள்.

கல்யாணம் நிச்சயமான பின், காதலன் வீட்டிற்குப் போய் 'மருமகள் ஒத்திகை' பார்க்கும் காட்சிகள் வித்தியாசம். 'நானே சமைக்கிறேன் அத்தே' என்று நதியா கிச்சனில் நுழைந்துவிட டைனிங் டேபிளில், கண்ணில் நீர் பெருகப் பெருகக் காரத்தைச் சகித்துக் கொண்டு, 'நல்லாச் சமைச்சிருக்கேம்மா' என்று வி. கே. ஆரும், மனோரமாவும் பாராட்டும் கட்டமாகட்டும், 'ஒரு பெட், இந்தப் பென்சிலைத் தாண்டி நீங்க அந்தப் பக்கம் போயிடுவீங்களா?' என்று நதியா காதலனிடம் சவால் விட்டு ஜெயிக்கும் இடத்திலாகட்டும், அந்த உறவுகளின் அன்னியோன்னிய நெருக்கங்கள் வெகு விமரிசையாய் வெளிப்படுகின்றன.

அதுசரி, கதைக்கு இந்த முடிவு தேவையா?

தயாளனின் காமிரா நேர்த்தியாய் உழைத்திருக்கிறது.

டி. ராஜேந்தரின் இசை வெகு இதம். 'மாலை எனை வாட்டுது' பாடல் ஆறு பாடல்களில் டாப்.

கதை எழுதி டைரக்ட் செய்திருக்கும் வி. அழகப்பன், சுவையான சம்பவங்களைச் சாமர்த்தியமாய்த் தொகுத்து, இறுதிவரை தொய்வில்லாமல் கொண்டு போயிருக்கிறார். உங்கள் அடுத்த படம் எப்போது, அழகப்பன்?

— ஜெயமன்மதன்



# சாலைத் திருப்பங்கள்

நந்தினி மற்ற பெண்களைப் போலில்லை. சட்டென்று உடைந்து போவதோ, உடனுக்குடன் ஒப்பாரி வைப்பதோ அவளுக்கு அப்பாற்பட்டவை. அவளுக்கு ஏமாற்றங்களை நேசிக்கத் தெரியும். எதிர்பார்த்தோ, பாராமலோ நேரிடுதல் யதார்த்தம் என்பதை அவளால் புரிந்து கொள்ள முடியும்.

அதனால்தான் கணேசனின் தவிப்பையும், தடுமாற்றத்தையும் அவளால் இரசிக்க முடிந்தது. அவன் விரல் நடுங்க ஒரு கவரை நீட்டி ''வீட்டுக்குப் போயி படிச்சுப் பாரு நந்தினி'' என்றதும் ''இஸ் திஸ் லவ் லெட்டர்?'' என்று அவளால் குறும்பாகச் சிரிக்க முடிந்தது.

அவன் சிரிக்கும் மனநிலையில் இல்லை. நந்தினி அங்கேயே கவரைப் பிரிக்க எத்தனிக்கவும் படபடப்புடன் குறுக்கிட்டான்.

''ப்ளீஸ்... இங்கே வேண்டாம்.... தயவு செஞ்சு வீட்டுக்குப் போயி...''

கெஞ்சல் வழியும் வார்த்தைகள் மொண்ணையாகிவிட, கனத்தோடு தலைகுனியும் கணேசனைப் பார்க்க அவளுக்குப் பரிதாபமாக இருந்தது. மௌனமாகக் கவரை மடித்து ஜாக்கெட்டிற்குள் திணித்துக் கொண்டாள்.

''தென்... போலாமா கணேஷ்...?''

''ம்... போயிட்டு வா நந்தினி...''

''வழக்கமா வர்ற மாதிரி பதினாறு பிரிட்ஜ் வரைக்கும் வருவேன்னு நினைச்சேன்.''

''ஸாரி நந்தினி... வீட்ல கெஸ்ட் வந்திருக்கிறதினாலே...'' மீண்டும் வார்த்தைகளை விழுங்கிக் கொண்டான்.

''அப்புறம் கணேஷ்...''

''அப்புறம் நந்தினி... பார்ப்போம்... சந்தர்ப்பம் கெடைச்சா...''

நந்தினி அவனை உறுத்துப் பார்த்தாள். அவன் இன்னும் தலைகுனிந்து கொண்டுதானிருந்தான். கால் விரல்களால் மண்ணில் கோடு கிழித்துக் கொண்டு, ''நாளைக்கு ஊருக்குப் போறேன்'' என்று மெல்ல முணுமுணுத்துக் கொண்டு, நந்தினிக்கு ''பாவம் இந்தக் குழந்தை'' என்று தோன்றியது. மெலிதாகப் பெருமூச்செறிந்தாள். ஏதோ கனவுகளைக் கலைப்பவள் போலக் கண்களை மூடித் திறந்தாள். கைப்பையை எடுத்து மாட்டிக் கொண்டு, ''ஸீ யூ கணேஷ்'' என்றுள். தெருவில் இறங்கி நடந்தாள்.

எவ்வளவுதான் படித்திருந்தாலும், வாய் கிழியப் பேசினாலும், புதுமையான அணுகு முறைகளில் ஆர்வம் காட்டினாலும், சமுதாய நிர்ப்பந்தங்களுடன் போராடிப் போராடிக் கடைசியில் ஒரு கட்டத்தில் அவற்றுடன்ஓரளவுக்காவதுஉடன்பட்டுப்போவது தான் இங்கே சாத்தியமாகிறது என்பதை நந்தினியால் மறுக்க முடியவில்லை.

ஆனால் தீர்க்கமான முடிவெடுப்பதற்கும், எடுத்த பின்பு அதை ஸ்தாபிப்பதற்கும் இன்றைய இளைய தலைமுறை ஏன் இப்படித் தடுமாற வேண்டும் என்பதுதான் நந்தினிக்குப் புரியவில்லை. கணேசனின் முடிவு எப்படிப்பட்டதாயினும் அது வரவேற்கக் கூடியதுதான்.

இவளும் சரி, அவனும் சரி ஏதோ ஒரு முனைக்கு, எப்போதாவது வந்துதான் ஆக வேண்டும். இப்போது கணேசன் முந்திக் கொண்டிருக்கிறான். இதில் பிழையில்லை. ஆனால் இதைத் தைரியமாக விவரிக்கும் திராணியின்றி, முதுகெலும்பில்லாதபிராணி போல் கூனிக் குறுகிப் போய், பொய்யான உணர்ச்சிக் குவியலை உருவாக்கி, அதில் உட்கார்ந்து கொண்டு உளறிக் கொட்டினானே... அந்தக் கோழைத்தனத்தை நந்தினியால் மறக்கவும் முடியவில்லை. மன்னிக்கவும் முடியவில்லை.

ஆளரவம் குறைந்து போன இந்த அரை இருட்டில் பிரிட்ஜின் மேல் நிதானமாக நடந்து கொண்டிருக்கும்போது நந்தினியால் அந்த நிகழ்ச்சியை நினைத்துப் பார்க்காமலிருக்க முடியவில்லை.

நான்கு வருடங்கள் இருக்குமா? படிப்பை முடித்த கையோடு வந்திருந்த முதல் இண்டர்வியூவுக்காகக் கோவை பயணம். பஸ்ஸில் அவளுக்கு முந்தைய ஸீட்டில் கணேசன் இருந்தான். பஸ் புறப்பட்ட போது விரித்த புத்தகத்தை அவன் மூடுவதாகக் காணோம். பஸ் பிரயாணத்தில் படிப்பது அவ்வளவு சுவாரஸ்யமான விஷயமாக உணர முடியாததால் நந்தினி புத்தகம் எதுவும் கொண்டு வரவில்லை. வெளியே வேடிக்கை பார்த்து அலுத்துப் போய் விட்டதாலும், இனி தூங்காமலிருக்க முடியாது என்ற நிலை ஏற்பட்டதாலும், வேறு வழியின்றி கணேசனைக் கேட்டாள்.

''ஸார் — அந்தப் புஸ்தகத்தைக் குடுங்களேன்; படிச்சுட்டுத் தரேன்!''

''நான் யாருக்கும் புத்தகத்தை இரவல் குடுக்கறதில்லே'' கத்திபோல வீசிய அவன் வார்த்தைகள் அவளை லேசாகக் காயப்படுத்தினாலும், வித்தியாசமாகத் தெரிந்த அவனுடைய ஆகிருதி அவளை வியப்பில் தள்ளியது. கணேசன் அதோடு நின்றுவிடவில்லை.

''நல்ல புத்தகங்கள் நிறைய வரணும்னு இரவல் வாங்கிப் படிக்கணும்ங்கிற எண்ணத்தை விட்டுட்டு நாமே சொந்தமா சில புத்தகங்கள் வாங்கணும் — எவ்வளவோ செலவு பண்றோம் — இல்லையா மேடம்.''

அவனுக்கு நந்தினி பதில் சொல்லவில்லை. பக்கத்து ஸீட்டில் இருந்த இன்னொரு இளைஞன் ஆவேசமாகக் குறுக்கிட்டான்.

''உன் அட்வைஸை யாருய்யா கேட்டாங்க! மூஞ்சியில அடிச்ச மாதிரி பதில் சொல்லிட்டுப் பெரிசா பிரசங்கம் வேறே... இந்தாங்க... இதை வேணா படிங்க மேடம்...''

காலரைத் தூக்கிக் கொண்டு முகத்தில் நிறைய வழியவிட்டபடி அவன் நீட்டிய அசிங்கமான அட்டை போட்ட மாத நாவலை நந்தினி நாசூக்காக மறுத்துவிட்டாள்.

யாராவது ஒரு இளம்பெண் தன்னிடம் எதுவும் கேட்க மாட்டாளா என்று ஏங்கித் தவமியற்றும் கூட்டத்திலே, அப்படி ஒருத்தி கேட்டும் கூடத் தன் தீர்மானத்தில் தளராமல் பிடிவாதமாக இருந்த கணேசனை அவளுக்குப் பிடித்திருந்தது.

அவள் போயிருந்த இண்டர்வியூவிற்கே அவன் வந்திருந்ததும், இருவருக்குமே அந்த வேலை கிடைக்காமல் போனதும், ஏதோ தற்செயல்தான் என்றாலும் அவர்கள் பழக்கம் அந்த நாளிலிருந்து படியேற ஆரம்பித்தது. இருவரும் உள்ளூர்தான் என்றானபோது அவர்கள் சந்திப்பதற்குச் சிரமம் ஏற்படவில்லை. பதினாறு பிரிட்ஜ், பம்ப் ஹவுஸ் பகுதி, கீழ்மேட்டூர் பார்க், தங்கமாபுரிப் பட்டிணம் முருகன் கோவில், உச்சிப் பிள்ளையார் கோவில் இப்படிப் பல இடங்களில் அவர்கள் தனிமையில் சந்திக்க முடிந்தது. பார்த்தது, படித்தது, கேட்டது பலவற்றையும் பற்றிச் சர்ச்சை செய்ய முடிந்தது. வலிக்கும் சமயங்களில் ஒருவருக்கொருவர் ஆறுதல் வார்த்தைகளால் ஒத்தடம் கொடுக்க முடிந்தது.

நந்தினியின் அதிர்ஷ்டமோ, அல்லது அவளுடைய பெற்றோர்களின் செல்வாக்கோ, ஏதோ ஒன்று அவள் உடனடியாக வேலை பெறுவதற்கு வாய்ப்பளித்தது. நடுத்தர வர்க்கத்தின் தினப்படி போராட்டத்துக்கு நடுவே கணேசனால் இதில் வெற்றி பெற முடியவில்லை.

சிஷ்ரா

நிரந்தரமற்ற அற்பாயுள் வேலைகளில் அல்லாடிக் கொண்டிருந்தான். பெரும் பாலான சமயங்களில் அவனுக்கு தைரியம் சொல்வதற்காகவே நந்தினி அவனை வலியச் சந்திக்க வேண்டி இருந்தது.

"உண்மையிலேயே நீ ரொம்ப வித்தியாச மான பொண்ணு நந்தினி. இந்த மாதிரி சந்தர்ப்பத்திலே நான் கூட உன் அளவுக்குத் துணிச்சலா நடந்துக்குவேனாங்கிறது சந் தேகம்தான்."

அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு இதே கணேசன் நெகிழ்ந்து போயிருக்கிறான். கண்களைக் கூட கலங்கடித்துக் கொண்டிருந் திருக்கிறான். அது அவளை அவளுடைய அத்தை மகன் சுரேஷ், தன் நண்பனோடு வந்து "பெண் பார்க்க" ஏற்பாடு செய்யப் பட்டிருந்த சமயம். ஏற்கெனவே முடிவாகி இருந்த விஷயம் என்றாலும் ஒரு சம்பிரதாய நிகழ்ச்சியாக அது ஏற்பாடாகி இருந்தது.

சுரேஷ் அவனுடைய நண்பனை நந்தினிக்கு அறிமுகப்படுத்தியதைப் போலவே, அவளும் யாரும் எதிர்பாராத விதமாகக் கணேசனை இழுத்து "மீட் மை பெஸ்ட் பிரண்ட் மிஸ்டர் கணேசன்" என்று அறிமுகப்படுத்தியதும் எல்லோரும் அதிர்ந்துதான் போனார்கள். சுரேஷ் பேயடித்ததைப் போலாகிவிட் டான். கணேசனுக்கு உடம்பெல்லாம் வேர்த்துவிட்டது.

"உன் பிஹேவியர் கொஞ்சங்கூட நல்லா இல்லே நந்தினி!" சுரேஷ் திக்கித் திணறிச் சொன்னதும் நந்தினி பிலுபிலுவென்று பிடித்துக் கொண்டாள்.

வாட் நான்சென்ஸ் யூ ஆர் டாக்கிங்! இதிலே பிஹேவியரைக் குற்றம் சொல்ல என்ன இருக்கு — நீங்க உங்க ஃப்ரெண்டை அறிமுகப்படுத்தின மாதிரி நானும் என் சிநேகிதனை அறிமுகப்படுத்தினேன். இதை எதுக்காக நான் மறைக்கணும்? மறைச்சி வெச்சு எங்க ஃப்ரெண்ட்ஷிப்பைக் களங் கப்படுத்தணுமா? நாங்க என்ன காதலிச்சிக் கிட்டா இருக்கோம்! பயந்து போய் மறைக் கறதுக்கு!

அதற்குப் பிறகு சுரேஷ் உட்கார்ந்திருக்க வில்லை. நந்தினியின் அப்பா பெல்ட்டைக் கழற்றினார். ஏதேதோ களேபரமாகி வீடு தூள் பட்டது. கொஞ்சநாள் கழித்துச் சந்தித்தபோது கணேசன்தான் கல்யாணத் தைப்பற்றி விசாரித்தான். சுரேஷ் தன் மனைவி யோடு ஹனிமூனுக்காக ஹைதராபாத் போயிருப்பதாகச் சொல்லிவிட்டு நந்தினி விழுந்து விழுந்து சிரித்தாள்.

அதற்குப் பிறகு நாட்கள் வாரங்களாகி, வாரங்கள் மாதமாக மலர்ந்து கொண்டிருக் கையில்தான் நந்தினி கேட்டாள் —

"ஏன் கணேஷ்! உன்னைச் சந்திக்கறது இவ்வளவு கஷ்டமான காரியமா இருக்கு?"

"என்ன சொல்றதுன்னே தெரியல நந்தினி. நம்ம நட்பு ஒருத்தருக்கொருத்தர் அலுத்துப் போச்சா?"

"எனக்கு அப்படி இல்லே."

"அப்ப... எனக்குத்தான் அலுத்துப் போச் சுன்னு சொல்றியா?"

வார்த்தைகள் தடித்து உஷ்ணமேற்றுக் கொண்ட புதிய வாசனையை உணர்ந்தவனைப் போல கணேசன் மௌனமானான். நந்தினி தான் சிரித்துக்கொண்டே, "ரிலாக்ஸ் கணேஷ்" என்றாள்.

நந்தினி விசாரிக்காமலே கணேசனைப் பற்றிச் சில விஷயங்கள் காதில் விழுந்தன; திருநெல்வேலி பக்கமிருக்கும் கணேசனின் பணக்கார மாமா தன் பெண்ணையும் கொடுத்து, வேலையும் வாங்கிக் கொடுக்க ஏற்பாடு செய்து கொண்டிருப்பதாக. வாழ்த்து சொல்வதற்காகவே கூட கணே சனைத் தேடிப் பிடிக்க வேண்டியதாகிவிட் டது.

நந்தினி போனபோது சட்டென்று அவன் வீட்டுக்குள் ஒரு தாவணி மறைவது தென் பட்டதும்தான் அவள் சாதாரணமாகக் கேட்டாள்.

"என்ன, மாமா பொண்ணா கணேஷ்?"

அவன் அவசரமாக மறுத்தான்... இல்லே 'பொய்' சொன்னான். 'இல்லே' என்றான். ஒருவேளை நந்தினியை அவளுக்கு அறிமுகப் படுத்துவதில் விருப்பமில்லையா, அல்லது அனாவசியக் குழப்பங்கள் ஏற்படுமே என்ற பயமா?

நந்தினியால் புரிந்து கொள்ள முடிந்தது. கணேசன் தன் எதிர்கால வெளிச்சத்துக் காக எல்லாவற்றுடனும் இழைந்து கொடுக்க எத்தனித்துவிட்டான்! இனி அவன் தீர்மானங் கள் திசை மாறலாம்! பஸ்ஸில் யாரேனும் புத்தகங்கள் இரவல் கேட்டால் இன்முகத் தோடு எடுத்துக் கொடுக்கலாம்! ஏன்? அவனே கூட இரவல் கேட்கலாம்!

நெடிய பாதையில் இரைக்க இரைக்க ஓடியாகிவிட்டது. இனிமேல் திருப்பங்கள் தான்! இங்கே இளைப்பாற விரும்புபவர் களுக்கு இவையெல்லாம் அவசியமானவை!

எனவேதான் கணேசன் கவரைக் கொடுத் ததும், நாசூக்காய் நகர்ந்து கொண்டதும், பெரிய விஷயமாய் நந்தினியைப் பிடித் தாட்டவில்லை.,

நந்தினி சேலம் கேம்ப் இருப்பத்தில் திரும்பி வீட்டுக்கு வந்தாள். நேரே பாத்ரூமுக்குப் போய்க் கதவைச் சாத்திக் கொண்டு ஈர மாகிவிட்டிருந்த கவரை எடுத்துக் கடிதத்தை உருவினாள்.

"என்னை மன்னித்துவிடு நந்தினி! வாழ்க்கை போராடுவதற்கல்ல என்று புரிந்து கொண்டேன். இனி உன்னுடன் போட்டியிட எனக்குத் திராணி இல்லே. ஆகவே, "குட்பை!" — கணேசன்."

நந்தினி மெல்லப் புன்னகைத்தபடி கடி தத்தைத் துண்டு துண்டாகக் கிழித்து வீசி னாள்.

வெளியே பாத்ரூம் கதவைத் தட்டி அம்மா கேட்டாள்! "உள்ளே என்னடி பண்றே நந்தினி?"

"ம்... தலைமுழுகிக்கிட்டு இருக்கேன்ம்மா."

நந்தினி சொம்பு ஜலத்தை எடுத்துத் தன் மேல் கவிழ்த்துக் கொண்டாள். வெளியே அம்மா, "அதுக்குள்ளவா" என்று முணு முணுப்பது கேட்டது. நந்தினி அதற்கும் சிரித்துக் கொண்டாள்.

நந்தினி மற்றப் பெண்களைப் போலில்லை! அவளுக்கு ஏமாற்றங்களை நேசிக்கத் தெரி யும்!

சத்யம் A/C
சங்கம் A/C
ஸ்ரீகிருஷ்ணா
ஸ்ரீபிருந்தா A/C
3 காட்சிகள்
காசி A/C
4 காட்சிகள்

ராஜ்கமலின்...

# விக்ரம்



ராஜசேகர்
சுஜாதா
இளையராஜா
ரங்கா
விட்டல்



# நெருப்பாக நீ

**சோ**பா கொள்ளாமல் உட்கார்ந்திருந்த டாக்டர் — ஸ்டேஷன் மாஸ்டரான ஜோஸியரை — எரித்து விடுவது போலப் பார்க்கிறார்.

சோபாவின் கைப்பிடியில் டாக்டரின் தர்மபத்தினி... இவர்கள், தன்னைப் பற்றித்தான் சிண்டைப் பிய்த்துக் கொள்கிறார்கள் என்கிற ஸ்மரணையே இல்லாமல், கழுத்தில் வாக்மேனை மாட்டி, காதில் இயர் ஃபோனை வைத்தபடி நீண்ட சோபாவில் பள்ளி கொண்டிருக்கிறாள் டாக்டரின் ஒரே பெண், மல்லிகா.

அப்பாவும் பெண்ணும் ஒரே அச்சில் வார்த்தது போல... அதே சிவப்பு. அதே குள்ளம். சதைப் பிடிப்பான தேகம்.

இவர்களுக்கு நேர்மாறாய்ச் சற்று கறுப்பாய், எடுப்பான பல்லும், காற்றில் பறக்கும் சரீரமும், முகத்தில் நிரந்தரமாய்த் தங்கிப் போன கடுகடுப்புமாய் இருந்தாள் டாக்டரின் மனைவி — பரிமளம்.

பெண்டாட்டி இப்படி அமைந்து விட்டதில் டாக்டருக்குக் கழுத்து மட்டும் குறைதான்.

என்ன செய்வது... ஜமீன் குடும்பத்துடன் சினேகம் ஏற்பட்டு, தானும் இப்படியொரு லட்சாதிபதி ஆவோம் என அவர் கனவு கூட கண்டதில்லையே...

அன்று அவர் இருந்த நிலையில் — காதலிக்க நர்ஸ் பரிமளாதான் கிடைத்தாள்.

ஆயிரம் ரூபாய்க்குள் பழனியில் கல்யாணம். கல்யாணமான இரண்டாவது மாதமே — பெண்டாட்டி, சம்பாதிக்கத் தெரியாத புருஷனுடன் வாழ்வதைக் கேவலமாய்க் கருதிப் பிறந்த வீட்டுக்குப் போய்விட்டாள். அதிலிருந்து டாக்டருக்கு ஆறு மாதம் இல்லறம். அடுத்த ஆறு மாதம் சாப்பாட்டிலிருந்து 'சகலமும்' காசு கொடுத்துத்தான்...

ஜமீன் குடும்பத்துக்கு வைத்தியம் பார்க்கத் தொடங்கிய பிறகுதான் — இவர்களது வாழ்க்கையும் நிரந்தரமாகியது...

பரிமளம் — வெகு நாட்களுக்குக் குழந்தையே இல்லாமல் இருந்தாள். எப்பொழுதாவது டாக்டர், இதுபற்றிப் பேச்செடுத்தாலே — எரிந்து விழுவாள்.

''ஏன்... இங்கே சொத்து கொட்டிக் கிடக்கோ.. மொதல்லே, சோத்துக்கு வழியைப் பாருங்க. அப்புறம் பிள்ளையைப் பத்தி யோசிக்கலாம்.''

இதற்குப் பின் அவர், தப்பித் தவறிக் கூடக் குழந்தை வேண்டும் என்கிற விருப்பத்தை, மனைவியிடம் சொன்னதே இல்லை...

லோகநாதனின் இரண்டாவது மனைவி புவனா — அவினாஷைப் பெற்றபோது — பரிமளத்துக்கு ஒரு குழந்தை இறந்து பிறந்தது.

நந்து பிறந்த இரண்டொரு வருடங்களில், இவளுக்கு மல்லிகா பிறந்தாள்...

அப்போதிருந்த குஷியில் ஜமீன்தார் லோகநாதன் — யோசித்துப் பார்க்காமல் வார்த்தைகளை வாரியிறைத்துவிட்டார்.

''டாக்டர்... மூணு பசங்கள்லே — எந்தப் பையனோட ஜாதகம், உங்க பொண்ணோட

ஜாதகத்தோட ஒத்துப் போறதோ... அவனை இழுத்து மணையில் உட்கார வெச்சு, உங்கள் மகள் கழுத்துல தாலி கட்டச் சொல்றேன்... எது எப்படியிருந்தாலும், நீங்க எனக்குச் சம்பந்தி ஆகப் போறீங்க...''

குழந்தைகளின் எதிர்காலத்தை நம்பி, வாக்குக் கொடுப்பதின் ஆபத்தை, லோகநாதன், அப்போது உணர்ந்திருக்கவில்லை.

என்றைக்கு லோகநாதனின் இரண்டாவது மகன் கிணற்றில் விழுந்து, அற்பாயுசில் போனானோ, அன்றைக்கே டாக்டருக்குக் கொஞ்சம் அதிர்ச்சிதான்...

பரிமளா, அவினாஷுக்கு மகளைக் கட்டி வைக்கலாம் என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

அவன், 'ஷாக்'லே உறைஞ்சு கிடக்கான். தம்பி கிணத்துல விழறதைக் கண்ணால பார்த்திருக்கான் இல்லே? ஏற்கெனவே பையன் பயந்தாங்கொள்ளி... ஏன், கொஞ்சம் அசடுன்னு கூடச் சொல்லலாம். அவங்க அப்பா, கையில் சவுக்கை எடுத்தா, பையன் டிராயரை நனைச்சிப்பான். பெரியம்மா, காணாமப் போனப்பவே, ஒரு வாரம் ஜுரத்துல படுத்துட்டான்...இருக்கிற நிலைமையைப் பார்த்தா, பையனுக்குப் பைத்தியம் பிடிச்சாலும் ஒண்ணும் ஆச்சரியமில்லே...''

''அப்ப பேசாமல் மூணாவது பிள்ளைக்கு முடிக்கப் பாருங்க...''

பரிமளா, மிகச் சுலபமாகச் சொல்லி விட்டாள். டாக்டரும் எல்லாம் தான் போட்ட திட்டத்தின்படி நடந்துவிடும் என்றுதான் நம்பிக் கொண்டிருந்தார்.

ஜமீன்தார் கொடுத்த வாக்கை, ஞாபகப் படுத்துவதற்காகவே, அடிக்கடி — 'என்ன சம்பந்தி எப்படியிருக்கீங்க' என்றும், 'உங்க மருமகனுக்கு ஸ்கூல்லே ஏதோ விழாவாம்... நான் போகலையின்னா, என்னைப் பின்னி எடுத்திடுவா' — என்றும் கூறி, உறவு முறையை நிலைநிறுத்திக் கொண்டிருந்தார்.

போதாக்குறைக்கு, ஸ்டேஷன் மாஸ்டர் வேறு. இவரைப் பார்க்கும் பொழுதெல்லாம், ''ஆஹா, உங்க பொண்ணோட ஜாதகம்தான் எப்பேர்ப்பட்டது... லட்சம் லட்சமா வாரிக் கொட்டப் போறான்னு.'' — இப்படிச் சொல்லிச் சொல்லி அவரை, முடுக்கி விட்டிருந்தார்.

இப்பொழுதோ — 'பொசுக்'கெனப் புதியவள் ஒருத்தியை, நந்து இழுத்து வந்தது — எரிகிற கொள்ளியால் தலையைச் சொறிந்து கொண்டாற்போல் இருந்தது டாக்டருக்கு.

எல்லாக் கோபமும் சேர்ந்து, ஸ்டேஷன் மாஸ்டர் தலையில் விடிகிறது...

''யோவ்! ரெண்டு பேரோட ஜாதகத்தையும் சரியாப் பார்த்துச் சொல்லுய்யா... என் பொண்ணு மல்லிகா பிரமாதமா இருப்பான்னு நீதானே சொன்னே?''

ஸ்டேஷன் மாஸ்டர், அரைக் கண்ணை மூடியபடி தலையாட்டுகிறார்.

''இப்ப மட்டும் என்ன... எங்கே, எந்த சதஸ்லே நிக்க வெச்சுக் கேட்டாலும் இதைத் தான் சொல்லுவேன் நான்...''

''அந்த நந்தகுமார் ஜாதகத்தைப் பார்த்துட்டு என்ன சொன்னே...''

''இந்த வருஷத்துக்குள்ளே விவாகப் பிராப்தி... பெண்டாட்டியா வரப் போறவ ரொம்ப அதிருஷ்டசாலி... அவ வரப் போற வேளை — இந்த ஜமீனுக்கே பழைய சந்தோஷம் வரப் போறதுன்னு சொன்னேன்...''

''உன் பேச்சை நம்பி, அந்த நந்தகுமாரை, மல்லிகாவுக்காக நான் ரிஸர்வ் பண்ணி வெச்சிருக்கேன்... நடுவுல எவளோ ஒரு பொண்ணு, பிரஷ்ஷும் கையுமா நுழைஞ்சிருக்காளே...''

ஸ்டேஷன் மாஸ்டர், குடுகுடுவென வாசலுக்கு ஓடி, வாயிலிருந்த வெற்றிலைப் பாக்கைத் துப்பிவிட்டு வருகிறார். முகம் முழுக்



கப் புன்னகை.

"நீர்.பெரிய டாக்டரா இருக்கலாம். ஆனா, இந்த மாதிரி சின்ன விஷயங்கள் எல்லாம் கூடத் தெரிஞ்சிருக்கணும்கற அவசிய மில்லே... உம்ம பொண்ணு அதிருஷ்டக் காரிதான். இல்லேயின்னு சொல்லலே... ஆனா, நந்தகுமாரனுக்கு மனைவியா வாய்க்கப் போற அதிர்ஷ்டசாலியும், உம்ம பொண்ணும் ஒருத்தியேதான்னு நான் என்னிக்காவது சொல்லியிருக்கேனா?"

"பின்னே?"

"இவ லைனே வேற. இவ ஜாதகப்படி கல்யாணம் பண்ணிட்டுக் குடும்பம் நடத்தறதைவிட, கலைத்துறையில — அதாவது சினிமா, நாடகம்னு போறதுதான் நல்லது... புருஷன், வீடு, குழந்தைகள்னு ஒரு வட்டத்துக்குள்ள அடங்குகிற ஜாதகம் இல்லே ஸ்வாமீ இது..."

பரிமளத்துக்குப் 'பக்'கென்று இதயம் ஒரு முறை நின்று இயங்குகிறது.

சொன்னாலும் சொல்லாவிட்டாலும் மல்லிகாவின் குணம் அப்படித்தான்.

நிறைய சினிமா பார்ப்பாள். படிப்பு கூழ் பத்தாம் வகுப்பில் படிக்கும் பொழுதே



வகுப்பு ஆசிரியருக்கு, லவ் லெட்டர் எழுதி, அது — தலைமையாசிரியர் வரையில் போய் — ஜமீன் டாக்டரின் மகள் என்கிற செல்வாக்கினால் — மிகவும் கௌரவமான முறையில் பள்ளியிலிருந்து நீக்கப்பட்டாள்.

பரிமளாவும், ஜமீன் வீட்டு மருமகளுக்கு, குறைந்த பட்சம் எஸ். எஸ். எல். சி. சர்டிபிகேட்டாவது இருக்க வேண்டும் என்பதற்காக, மகளுக்கு டியூஷன் வைத்து — அதட்டியும், கனிவாகப் பேசியும், மேற்கொண்டு படிக்க வைக்கப் பிரம்மப் பிரயத்தனப் பட்டாள்.

பலன் பூஜ்யம்தான்.

மல்லிகா, காலை எட்டு மணிக்கு எழுந்திருப்பாள். அம்மா திட்டுகிறாளே என்பதற்காகக் கொஞ்ச நேரம், பாடப் புத்தகங்களைப் பரத்தி வைத்துக் கொண்டு மலங்க, மலங்க விழித்தபடி உட்கார்ந்திருப்பாள். எட்டரை மணிக்கு மூக்குப் பிடிக்க டிபன்.... மறுபடி பதினொரு மணி வரையில் சோபாவில் சாய்ந்து, காதில் இயர் ஃபோனும், வாயில் சூயிங்கமுமாய் நிஷ்டை. பன்னிரண்டு மணிக்கு மனசில்லாமல் குளியல். ஒரு மணிக்கு சிக்கன் பிரியாணியும், மட்டன் குருமாவுமாய் ஒரு கை பார்த்தல்... இரண்டு மணிக்கு வேலைக்காரி, தோட்டக்காரன் பெண்டாட்டி இவர்களுடன் அரட்டை. இதில், யார், யாரை வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்கிற விஷயங்கள்தான் மிகத் தீவிரமாக அலசப்படும். நாலு மணி முதலே — மாலை சினிமாவுக்காக அலங்காரம் அமர்க்களப்படும். இவளுக்கு ஏற்றாற்போல் அக்கம்பக்கத்தில் நாலைந்து பெண்கள் இவளொத்த வயதில் இருக்கிறார்கள். அவர்களுடன் ஊரில் இருக்கிற சினிமா தியேட்டர் ஒன்று விடாமல் நுழைந்து புறப்படுவாள்...

இரவு திரும்பி வரும்போதே — கண்களிரண்டிலும் சினிமாக் காட்சிகள்தான் நிறைந்திருக்கும்.

கூட வருகிற சிநேகிதிகள் — சினிமா கதாநாயகனின் அங்கலட்சணங்களை வெட்கமில்லாமல் விமரிசித்துக் கொண்டே வருவார்கள்.

இரவு — கனவு முழுக்க சினிமா கதாநாயகனுடன் ஆடிப் பாடுவாள். மறுநாள் எழுந்ததும் அந்தக் கதாநாயகனுக்கு மறக்காமல் லவ் லெட்டர் எழுதிப் போடுவாள். அந்த நடிகரிடமிருந்து பதில் கடிதம் வருகிற வரையில் மறுபடியும் கனவில் மூழ்குவாள்.

டாக்டரின் பிள்ளையில்லாக் குறையைத் தீர்க்க இப்படியொரு பிறவி வேண்டாம் தான்.

என்ன செய்வது... செய்த பாவத்துக்குத் தகுந்த கூலி வேண்டாமா?

இதில் வேடிக்கை என்னவென்றால், கிடைத்த கூலியை மறுபடியும் பாவ காரியத்துக்கே இவர் முதலாகப் போடத் துணிந்திருப்பதுதான்.

மல்லிகா மட்டும் அந்த லோகநாதனின் மருமகளானால்...

டாக்டரைக் கையால் பிடிக்க முடியாது...

இன்னமும் அவருக்குக் கண்களை மூடித் திறந்தால் மங்களாம்பாளின் அத்தனை நகை நகைகளும்தான் ஒளி வீசும்...

எல்லாத்தையும் என்னதான் செஞ்சான் மனுஷன். கேட்டா, மங்களாவோடவே எல்லாம் போயிடுத்துன்னு புலம்பறான்... ஜமீன் லேசுப்பட்டவனில்லே...

நெஞ்சுக்குள் இந்த நினைப்பு, சுழன்று, சுழன்று வட்டமிடும்.

இப்போது கூட, அந்த நினைப்புடன், புதுசாய் வந்து இறங்கியுள்ள இன்பாவின் நினைப்பும் சேர்ந்து, அவரைப் பாடாய்ப் படுத்த — ஸ்டேஷன் மாஸ்டரிடம் காய்ந்து விழுகிறார்:

இந்தாய்யா, நீ என்ன பண்ணுவியோ, ஏது பண்ணுவியோ, எனக்குத் தெரியாது. மொதல்லே என் பொண்ணு ஜாதகத்தை, அந்த நந்தகுமாரனோட ஜாதகத்துக்கு ஏத்த மாதிரி மாத்தி எழுது....

ஐயோ!

ஸ்டேஷன் மாஸ்டர், பொய்யாய் அதிர்கிறார்.

"என்னய்யா ஐயோ..."

"அதில்லே... ஒவ்வொரு ஜாதகத்துலேயும் நவக்ரகங்களும் எங்கே இருக்கணுமோ — அங்கேதான் ஆயுசு மட்டும் இருக்கும்... எந்த நேரத்துல எந்த கிரகம் எங்கே சஞ்சாரம் பண்ணணும்னு இருக்கோ... அப்படித்தான் வலம் வரும்... விதியை மாத்த முடியுமோ..."

"யோவ்... நேத்திக்கு பேப்பர் படிச்சீரா?"

"இல்லே ஸ்வாமீ!"

"நாலு பேரா சேர்ந்து — ஏதோ ஒரு கோவில்லே இருந்த புராதன வேலைப்பாடோடகூடின நவக்கிரகங்களையேபேர்த்து எடுத்துட்டுப் போயிருக்காங்க... கேள்வி முறை இல்லே. கேவலம், இந்த ரெண்டு கட்டத்துல இருக்கிற கிரகங்களையா மாத்த முடியாது? காசை விட்டெறிஞ்சா, கடவுளையே மாத்தலாம்யா..."

"சரி... சரி..."

ஸ்டேஷன் மாஸ்டர், ஜாதகத்தில் கண்களை ஓட்டியவாறே தலையாட்டுகிறார்...

"அப்புறம்... இப்ப வந்திருக்கே, அந்தப் பொண்ணு... அதைச் சட்டுபுட்டுனு கிளப்ப ஒரு வழியை யோசி... நீயா சொல்ற மாதிரி ஏதாவது சொல்லி, லோகநாதன் மனசைக் கலைக்கப் பாரு... நான் சொன்னால் அசிங்கமாப் போயிடும்... என்னமோ, என் பொண்ணுக்காகத்தான் சொல்றேன்னு நினைச்சுக்குவான்..."

"அந்தப் பொண்ணு ஊருக்கு வந்து எறங்கின அன்னிக்கே பார்த்தேன்... படு சுட்டி போங்கோ..."

அதற்கு மேலும் இன்பாவைப் பாராட்ட வாய் திறந்த ஸ்டேஷன் மாஸ்டர், பரிமளத்தின் முகக் கடுகடுப்பைக் கண்டதும் 'சட்'டெனப் பேச்சைத் திசை திருப்புகிறார்...

"ஆனாலும்... ஜமீனுக்கு யஜமானியா வர்றதுக்குத் தேவையான ஒரு கெத்து வேண்டாமோ... அதைக் காணோமே... இதுவே நம்ம பாப்பா தெருவுல வந்தா, எத்தனை பேர் குனிஞ்சு சலாம் போடறாங்க... கலர் கலரா டிரஸ் பண்ணிண்டாப்பல ஆச்சா?"

டாக்டர், ஜோஸியரின் சாமர்த்தியத்தை உள்ளூர மெச்சி, புன்னகை புரிகிறார்!

(தொடரும்)




அடுத்த முறை,
ஸன்ஃப்ளவர்
பாதுகாப்பு கவசம் மூலம் உங்கள்
குடும்பத்தைக் காத்திடுங்கள்.



**ஸன்ஃப்ளவர் இகானமி பேக். நீங்கள் இழப்பதோ சில சில்லறை காசுகளும் சில்லறை வனஸ்பதியும். பெறுவதோ அதி தூய்மை.**

WPL/25 35

உங்கள் குடும்பத்திற்கு, முற்றிலும் பாதுகாப்பானதையும், தூய்மையானதையும் கொடுங்கள்: ஸன்ஃப்ளவர் ப்ராண்ட் வனஸ்பதி, விட்டமின் A மற்றும் D செறிந்த, ஊட்டமிக்க, ஆரோக்கியமான வனஸ்பதி உங்களுக்குக் கிடைக்க, ஸன்ஃப்ளவர் பாதுகாப்பு கவசத்தால் ஸீல் செய்யப்பட்டு, பேக் செய்யப்பட்டு வருகிறது.








# ஸன்ஃப்ளவர்

ப்ராண்ட் வனஸ்பதி

இதை விடச் சிறந்தது தூய நெய் மட்டுமே.

கிலோ மற்றும் ½ கிலோ பேக்குகளில் கிடைக்கிறது.

WIPRO LTD - Closer to the consumer

## தந்தி செய்த மாயம்!

என் அண்ணன் மகன் கேப்டன் நாராயணன், கொரட்டூர் கோவிந்த ராஜன் மகள் சுதாவை மணப்பதாக நிச்சயதார்த்தம் நடந்தேறியது. முகூர்த்தத்திற்கு இன்னும் ஆறுமாத கால இடைவெளி இருந்ததால், இருவருக்கு இடையிலும் கடிதப் போக்குவரத்து ஏற்பட்டிருந்தது. அப்போது இருவருக்கிடையிலும் ஏதோ ஊடல் ஏற்பட்டு, 'கல்யாணம் ரத்து செய்யப்படுகிறது' என்று மணமகன் மணமகளுக்கு எழுதிவிட்டான். பெண்ணின் பெற்றோர் பதறிப் போய் என்னிடம் வந்து



முறையிட்டனர். பெண் கான்வென்ட்டில் படித்தவளென்பதால் அவன் அவளிடம் மன்னிப்புக் கேட்கத் தயங்கவே, மணப்பெண் அனுப்பியதுபோல் நானே, 'Deeply regret my error - Please forget and forgive' என்று கௌஹாத்தியிலிருந்த மணமகனுக்கு ஒரு பொய்த் தந்தி அடித்தேன். அவ்வளவு தான்! அவனும் மின்னல் வேகத்தில் டெலிபோன் போட்டு மணமகளிடம் பேச, நிலைமை சமாதானமாகிக் கடந்த 83 ல் ஜாம் ஜாம் என்று திருமணம் நடந்தேறியது!

— டி. வெங்கட்ராமன்,
சென்னை — 11.

வாசகர் பங்கு

# நன்மை தரும் ஒரு தந்திரம்

### இரவில் நடந்த இளம்பெண்!

ஆபீஸில் வருடாந்திரக் கணக்குகளை முடித்த அலுப்புடன் சைக்கிளில் வீடு திரும்பிக் கொண்டிருந்தேன். அப்போது இரவு பத்து மணி. பஸ் நிலையத்திலிருந்து ஊருக்குள் செல்லும் சாலையில் இளம் பெண் ஒருத்தி கையில் ஸூட்கேஸைப் பிடித்துக் கொண்டு மிரட்சியுடன் நடந்து போய்க் கொண்டிருக்க, சம்பந்தமே இல்லாத மூன்று பேர் வம்பு பேசியபடி அவளைத் தொடர்ந்து சென்று கொண்டிருப்பதைக் கவனித்தேன். உடனே சைக்கிளை வேகமாக மிதித்துக் கொண்டு போய் அவளருகில் நின்று, "என்னம்மா வசந்தி! இப்போதுதான் வருகிறாயா? ஸூட்கேஸைக் கொடு!" என்று சொல்ல, முதலில் திகைத்த அவள் பிறகு நிலைமையைப் புரிந்து கொண்டு என் சைக்கிளின் பின்னால் உட்கார்ந்து கொண்டாள். பிறகு அவளை அவளது உறவினர் வீட்டில் விட்டுவிட்டு வீடு திரும்பிய போது வேலைக் களைப்பெல்லாம் பறந்து போய்விட்டிருந்தது!

— எஸ். சங்கரசுப்பு, திருச்செந்தூர்.

### தந்தைக்கு உபதேசம்!

என் நண்பனைப் பார்ப்பதற்காக அவனுடைய ஊருக்குச் சென்றிருந்தேன். அப்போது அவன் தந்தை ஏராளமாகச் சிகரெட் பிடிப்பதாகவும் அதை நிறுத்தவே முடியவில்லையென்றும் அங்கலாய்த்தான். பிறகு ஒரு திட்டம் தீட்டினோம். இரவு அவன் தந்தை படுத்திருந்த அறைக்குப் பக்கத்து அறையில் நாங்கள் இருந்தோம். அப்போது அவன் தானாகவே இருமலை வரவழைத்துக் கொண்டு இருமினான். உடனே நானும், "நீ ஒன்றும் பயப்படாதே! இப்போதுதானே குடிக்க ஆரம்பிச்சிருக்கே. கொஞ்ச நாளில் எல்லாம் சரியாகிவிடும். ஆனால் காசுதான் அதிகமாகச் செலவாகும். கவனித்துக் கொள்!" என்று நடித்தேன். இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த அவனது தந்தை கொஞ்சம் கொஞ்சமாகச் சிகரெட் பழக்கத்தை நிறுத்தி, இப்போது மற்றவர்களுக்கு அறிவுரை கூறுகிறாராம்!

— தே. காந்தி, மதுரை — 10.

### தோழிக்கு வந்த ஆபத்து!

தலைமை ஆசிரியர் கூப்பிட்டதாக பியூன் சொல்ல, அவர் அறைக்குச் சென்றேன். அங்கே என் தோழி டி. லலிதா நடுங்கியபடி நின்று கொண்டிருந்தாள். தலைமை ஆசிரியர் கையில் ஒரு கடிதம். என்னிடம், "இந்தக் கடிதம் உன்னுடையதா?" என்று கேட்டார். அதை வாங்கிப் படிக்க ஆரம்பித்ததுமே எனக்கு விஷயம் புரிந்துவிட்டது. அவள் அத்தை மகன் அவளுக்கு எழுதிய காதல் கடிதம்தான் அது என்று! உடனே நான் நிலைமையைச் சமாளிக்க, "அவளை ஏப்ரல் முட்டாளாக்க நான்தான் அதை எழுதினேன் சார்!" என்று துணிந்து பொய் சொன்னேன். அவள் படிப்பும் காப்பாற்றப்பட்டது. என் அறிவுரைப்படி படிப்பு முடியும் வரை அவளும் காதலை ஒதுக்கி வைத்திருந்து இப்போது அத்தை மகனையே மணந்து மகிழ்ச்சியாக இருக்கிறாள்.

— ஜெ. லலிதா, சேலம்—9.

### அப்பாவி போல் கேட்டேன்!

என் நண்பரின் மனைவி மிகவும் பொல்லாதவர். எப்போதும் கணவருடன் சண்டை போட்டுக் கொண்டே இருப்பார். ஒருநாள் நண்பருக்குத் தெரியாமல் அவர் மனைவியிடம் சென்று, "உங்கள் கணவர் உங்களை விவாகரத்து செய்வதற்காக அடிக்கடி ஆலோசனை கேட்கிறார். அது உண்மையா?" என்று ஒன்றும் தெரியாத அப்பாவி போல ஒரு பொய்யைக் கேட்டேன்! அன்று முதல் அவர் கணவரிடம் எதிர்த்துப் பேசுவதோ, சண்டை போடுவதோ கிடையாது. நான் நடத்திய நாடகம் என் நண்பருக்குக் கூடத் தெரியாது!

— எஸ். விஜயராகவன், சென்னை — 32.

### ஆயிரம் பொய் சொல்லி...

என் தோழியின் மகள் திருமணம் நிச்சயமானது. மாப்பிள்ளை வீட்டார், பார்க்கும் வேலையைப் பெண் விட்டுவிட வேண்டுமென்றனர். நான், வேலையை விடாமலேயே விட்டுவிட்டதாகப் பொய் சொல்லச் சொன்னேன். அவர்களும் அப்படியே சொல்ல, திருமணமும் நடந்தேறியது. பிறகு மூன்றே மாதங்களில் மாப்பிள்ளை பார்த்த வேலை தற்காலிகமாகப் பறிபோய் விட்டது! அப்போது நீண்ட விடுமுறையிலிருந்த புதுமணப் பெண் மீண்டும் வேலைக்குச் சென்ற போது, அவர்கள் குடும்பத்திற்கு மிகவும் உதவிகரமாக இருந்தது. பொய் சொல்லத் தூண்டிய என்னையும் அவர்கள் மறக்கவில்லை!

— வசந்தா வேணுகோபால், சென்னை—8.

### பட்டுப் புடவை போக்கிய பயம்!

நான் கிறிஸ்துவப் பெண். என் கணவரோ பிராமணர். இருந்தபோதிலும் இரண்டு



''நம் மன்னர் அமைச்சர் மீது கோபமாக இருக்கிறாராமே, ஏன்?''

''ஊழல் செய்தவர்கள் யாராக இருந்தாலும் கமிஷன் போடப்படும்'னு அறிக்கை விடச் சொன்னதுக்கு, அமைச்சர் பழக்க தோஷத்தில் 'கமிஷன் கேட்கப்படும்'னு அறிக்கை விட்டுட்டாராம்!''

— கடுவை கோபால்சாமி

வீடுகளிலும் ஒப்புக் கொண்டு திருமணம் செய்து வைத்தார்கள். ஆனாலும் திருமணத்திற்குப் பிறகு என்னை மாமியார் வீட்டில் கொடுமைப்படுத்துவார்களோ என்று அஞ்சி என் பெற்றோர் என்னை மாமியார் வீட்டுக்கு அதிகமாக அனுப்பாமலேயே வைத்திருந்தனர். இந்த அச்சத்தைப் போக்குவதற்காக நாங்கள் இருவரும் சேர்ந்து ஒரு பட்டுப் புடைவை வாங்கி என் மாமியார் வீட்டில் எனக்கு அதைக் கொடுத்ததாக என் பெற்றோரிடம் சொன்னேன். பிறகு அவர்களும் மனம் மாறி, அதாவது சம்பந்தி வீட்டார் மீதிருந்த பயத்தை விட்டுவிட்டு என்னையும் தங்கு தடையின்றி அனுப்ப ஆரம்பித்தனர்.

— ரொஸாரியோ ரவிச்சந்திரன்,
சென்னை — 59.

### கந்த்சாமி வாத்யாரு தெரியுமா?

ஒருநாள் இரவு நேரத்தில் நானும் என் தம்பியும் வில்லிவாக்கத்திலிருந்து நடந்து வந்து கொண்டிருந்தோம். அப்போது இருட்டான ஒரு பகுதியிலிருந்து திடீரென்று ஒருவன் வந்து என் தம்பியின் கழுத்துக்கு நேராகக் கத்தியை நீட்டி, 'டேய், கத்தினே கீச்சுடுவேன். என்ன வச்சிருக்கயோ அதை மரியாதையா எடு!' என்றான். நான் அதிர்ச்சியடைந்தாலும் டக்கென்று, சமாளித்துக் கொண்டு தைரியத்தோடு என் வேஷ்டியைத் தூக்கிக் கொண்டே, ''எவண்டா சோமாறி, என்கிட்டேயே வேலை காட்றது? இன்னா? தொயிலுக்குப் புச்சா? கந்த்சாமி வாத்யாரு கிட்டக் கத்துக்கலையா?'' என்று கேட்டுக் கொண்டே வேகமாக ஒரு விசிலும் அடித்தேன். என்ன மாயமோ! வந்தவன் தன் கையிலிருந்த கத்தியைக் கீழே போட்டுவிட்டு, 'மன்ச்சிக்கோ பிரதர்!' என்று ஒரு கும்பிடு போட்டுவிட்டுத் தன் கையிலிருந்த ஒரு கடிகாரத்தையும், மோதிரத்தையும் என் தம்பியின் கையில் போட்டுவிட்டுப் பிடித்தான் ஓட்டம்! இன்னமும் அந்தக் கடிகாரமும் மோதிரமும் என்னிடம் இருக்கின்றன.

— டி. டி. வரதராஜன், சென்னை — 29.

### டீ. வி. யால் திருந்தினர்!

எங்கள் கிராமத்துச் சிறுவர், சிறுமியர் பள்ளிக்குச் செல்வதில் ஆர்வம் காட்டவில்லை. அவர்களின் பெற்றோரும் அதுபற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. ஊரிலிருந்த ஒரேயொரு டீ. வி. என் நண்பன் வீட்டு டீ. வி. தான். எனவே, பள்ளி செல்லும் குழந்தைகளைத்தான் டீ. வி. பார்க்க அனுமதிப்போம் என்று சொல்லி அவ்வாறே செய்தோம். அப்படிப்பட்ட குழந்தைகளுக்கு ஏராளமான நல்ல புத்தகங்களையும் படிக்கக் கொடுத்தோம். இதன் விளைவாக டீ. வி. பார்க்கும் ஆசையிலும், புத்தகங்கள் படிக்கும் ஆசையிலும் கவரப்பட்ட குழந்தைகள் கொஞ்சம் கொஞ்சமாகப் பள்ளிக்குச் செல்ல ஆரம்பித்துவிட்டனர்!

— எஸ். துரைராஜ், அழகப்பபுரம்.

### என் அப்பாவும், சித்தப்பாவும்!

எனது அப்பாவுக்கும் சித்தப்பாவுக்கும் நீண்ட நாட்களாக மனஸ்தாபம். இருவரும் பேசிக் கொள்வதில்லை. திடீரென என் சித்தப்பாவுக்குக் குவைத்தில் வேலை கிடைத்துவிட்டது. பத்து நாட்களில் புறப்பட இருந்தார். எனக்கு இருவரையும் அந்தச் சமயத்திலாவது இணைத்து வைத்துவிட வேண்டும் என்று ஆசை! எனவே ஒருநாள் எனது சித்தப்பாவிடம் சென்று எனது அப்பா பாத்ரூமில் வழுக்கி விழுந்து விட்டதாக ஒரு பொய் சொல்லிச் சித்தப்பாவை என் வீட்டிற்கு அழைத்துவந்தேன். இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டபோது முதலில் திகைத்தாலும் பிறகு பழையவற்றை மறந்துவிட்டுப் பேசிக் கொள்ள ஆரம்பித்துவிட்டனர்!

— என். கிப்ளா ஆலம், மேட்டூர் டேம்.

---

ப்ளோப்ளாஸ்ட் வழங்கும் வி.ஐ.பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:

**ரொஸாரியோ ரவிச்சந்திரன்,**
**பிளாட் நெ. 1, அந்தோணி தெரு**
**எக்ஸ்டென்ஷன்,**
**கிழக்கு தாம்பரம்,**
**சென்னை — 600 059.**



முன்னணியில் கொழுந்துவிட்ட பகைமைத் தீயின் விளைவு: பின்னணியில் அமைதிக் கடல்.





தீ வைத்தல்கள்; கொள்ளைகள்...



"மீனே அரியற மாதிரி அரிஞ்சுட்டாங்களே..." — அகஸ்தினம்மை.

# இந்

மேலே ஆகாயத்தில் நட்சத்தி
மறைந்து மறைந்து தவழ்ந்த நில
அலைக்கரங்களை நீட்டி அந்த நில
அமைதியான இரவு. மீனவர்கள்

அந்த இரவின் துவக்கத்தில்த
தீப்பொறி போல, ஒரு சின்னச்
ளுக்கடை.

"ஆயிரத்தெட்டு இருக்கட்டு
ஏண்டா இதில் இழுக்கற...?"

"போடா... நீ மட்டும் யோ
பழிச்சே..."

"டேய்... இதுக்கு மேல பேசா

"நீ பேசாதே..."

"என்னடா செய்ஞ்சுருவ... அ

"ஏய்..."

"ம்... அடிக்கிறே...? என்னைய

அந்த வாலிபர்களின் சண்டை
விபரீதமாகுமுன் தடுத்தார்கள். ப

நிலா ஏறிய பின்னிரவு. பா
வானத்து நிலா வையகத்திற்கு வ

கரையை ஒட்டியிருந்த மீனவ
சிடுக்கத் தொடங்கியிருந்தன. தா
ளிடமிருந்து தங்கள் மார்புகளை
கொண்டிருந்த தூளிகளில் குழந்
துக்கத்தில் சிணுங்க... 'ஆராரோ
தாலாட்டுத் தவழ்ந்து வர, அந்த
நிலா, கடல், குழந்தைச் சிணுங்கல்
கடலோடிய களைப்புத் திர கள்ளை

கள்ளுக்கடைப் படியேறி...

வெளியில் வருகையில் ஜெ
மாறத் தொடங்கியிருந்தது. "ஆ
ராஜ்ஜா ஆ ஆ ஆ ஆ...

தள்ளாடிக் கொண்டிருந்த ஜெ

"டேய்... அவன் அந்தப் பைய
வச்சானே... அந்த எதிரிக் கும்ப

"தொலைச்சுருவோம்..."

சாதுவாகக் கிடந்த அரிவாள்
அவர்கள் ஓடிவந்து ஜெஸ்ஸியை

"யாரூ ஊனை...?"

"உங்க ஆளு நம்ம பையன்

# த நெருப்பை
# ணைப்பது
# யார்?



° "இந்த இடத்துல மனித சமுதாயமே இருக்காது!" — ஜான்.

° கன்னத்தில் வெட்டுப்பட்ட ஹென்றி.



° வக்கில் சார்.



° விடற்று மேலமுட்டத்தில் அகதிகளாக வாழும் லூயிஸ், அந்தோணி அடிமை, வேக அடிமை.



கள் கண்சிமிட்டின. மேகங்களுக்கு இடையில் ட்டி எட்டிப் பார்த்தது, காதலுடன்! கீழே வை 'வா' 'வா' என்று அழைத்தது கடல். னம் பாடிக் கொண்டிருந்த இரவு.

அந்தச் சிறு சம்பவம் நடந்தது. சின்னத் ம்பவம்! சம்பவம் நடந்த இடம் ஒரு சிறு

...டா... எங்க ஆத்தா, அப்பனேயெல்லாம்

யனே... நீயுந்தான் எங்க குடும்பத்தைப்

..."

...

சென்ற..."

அடிக்கிறே.. என்னேயா அடிக்கிறே...?" யச் சிறிதுநேரம் வேடிக்கை பார்த்தவர்கள் ந்தார்கள். கலைந்தார்கள்.

றுகளில் அலைகள் ஆக்ரோஷமாக மோதின. த கோபம் அந்தக் கடலுக்கு. குடியிருப்புக்களில் சிம்னி விளக்குகள் சிடு ார்கள் தூங்கிப் போயிருந்த சிறு குழந்தைக ழுசிரித்தார்கள். மர ஈத்திரத்தில் தொங்கிக் ளைப் படுக்க வைக்க, அவை தூக்கம் கலைந்த ஆராரோ... அவனியாள வந்த ராசா... — ழியாக நடந்து கொண்டிருந்த ஹென்றிக்கு ாலாட்டு ஆகியவை ஏற்றிவிட்ட மகிழ்ச்சியில், பருக வேண்டும் போலிருந்தது.

றியின் ஈ தடுகளில் அந்தத் தாலாட்டுத் தடு ரோ... ஆழாரோ... அவனியாழ்ழ வழ்ந்த...

றியை அந்தக் கும்பல் பார்த்தது. றட ஆண்டா... நம்ம பையன் மேல் கையை ாரண்டா..."

அவர்கள் கையில் ஏற... தடதடவென்று திர்கொண்டார்கள்.

ல கையை வெச்சிட்டான்... நாங்க சும்மா

இருந்துடுவோம்னு பாக்கறியா... டேய் வெட்டு அவனே...

"ஐயோ... ஐயோ... வெட்டாதீங்க... ம்ம்ம்..."

வெட்டுப்பட்ட ஹென்றியிடமிருந்து அமானுஷ்ய ஒலி எழும்ப, உயிரைக் காத்துக் கொள்ளும் ஆவலில் கால்கள் தரையில் பாவாமல் பறக்கத் தொடங்கின... ஓடு... ஓடு... ஓடு... ஓடு...

விடிகாலை.

பிடிபடாத நிலா இன்னும் கீழே வராமல் வேடிக்கை பார்த்தது. அலைகள் ஏறக்குறைய ஓய்ந்து போயிருந்தாலும் முயற்சியைக் கைவிடாத நேரம். அலைகளுக்கு வியர்த்திருந்தது. குடிசைகளில் சிம்னி விளக்குகள் அணைந்திருந்தன. குறட்டை ஒலிகள் மிகுந்திருந்தன. பெண்கள் விடிகாலைக் கனவுகளில் மிதந்தார்கள்.

அந்தப் பகுதியை நோக்கி ஒரு கும்பல் வந்து கொண்டிருந்தது. ஆயுதம் ஏந்திய கும்பல். திறந்த வெளியில் உறங்கியவர்களிடையில் புகுந்து... முகங்களைத் தேடி அடையாளங்கண்டு...

"டேய்... இவன்தான்டா... நம்ம ஆளை வெட்டின கும்பலைச் சேர்ந்தவன்தான்டா... இவனும்... வெட்டுங்கடா..."

"ஐயோ... ஐயோ... ஐயோ..." வெட்டுப்பட்ட பனிப்பிச்சையின் உடல் துடிக்கத் தொடங்கியது.

சூரியன் எழுந்தபோது, அந்த மண்ணில் சிந்தியிருந்த செந்நீரை எல்லாம் பூசிக் கொண்டு எழுந்தான். எங்கும் அபாயச் சிவப்பு! கூக்குரல்கள், ஓலங்கள், கொள்ளைகள், தீவைத்தல்கள், துரத்தல்கள், அழுகை... அழுகை... அமைதி... மயான அமைதி.

அந்தக் கிராமம்... முட்டம் என்று அழைக்கப்படும் கடற்கரைக் கிராமம்.

'இந்தக் கிராமம்தான் எத்தனை அழகு!' என்று வியக்கப்பட்டு, அதன் அழகு செலுலாய்டில் பதிக்கப்பட்டு, லட்சம் வெள்ளித் திரைகளில் வெளிச்சமாக்கப்பட்டுள்ளது. பாரதிராஜாவின் 'அலைகள் ஓய்வதில்லை' அணு அணுவாய் உருவான கிராமம் இது. ஆனால் இந்தக் கிராமத்து மக்களின் இன்றைய நிலை?

இந்தக் கிராமத்தையும், இதில் நடந்து விட்ட வன்முறைச் சம்பவங்களால் ஏற்பட்டிருக்கும் பின்விளைவுகளையும் பார்த்து விட்டுப் போகுமாறு, முட்டம் கிராமத்திலிருந்து ஒரு வக்கீலின் கடிதம் எங்களை அழைத்திருந்தது. நாங்கள் அந்தக் கிராமத்தை அடைந்த போது, ஏறக்குறைய அந்திப் பொழுது. 'தார்ச் சாலை கடற்கரை வரை ஓடிப் பளிரென்று நின்று விட்டது. ஒன்றிரண்டு கடைகள். சில நவீனக் கட்டிடங்கள். அப்புறம் சரிவாய்ப் பிரிந்த செம்மண் சாலை. அந்தச் சாலையில் நடந்தோம். வக்கீல் வீட்டை அடைந்தோம். வக்கீல் எங்களுக்காகக் காத்திருந்தார்.

"என்ன ஆயிற்று?" என்று கேட்டோம்.

"ஒரு சின்னக் கிராமம் ரெண்டாப் பிரிஞ்சிப் போச்சு..." என்றார். மனைவியை அழைத்தார்.

"போய் அவுங்களையெல்லாம் கூட்டிக்கிட்டு வா..." என்றார்.

சிறிது நேரத்தில் சில பெண்கள் வந்தார்கள்.

"இவங்களெல்லாம் கீழ முட்டத்தில் இருந்தவங்க. எல்லாரும் ஒரே குடும்பமாத்தான் இருந்தாங்க. இப்ப இவங்களுக்குத் தங்க வீடில்லை... இவங்க பொருளெல்லாம் கொள்ளை போய்டிச்சி... இவங்க வீட்டையெல்லாம் இடிச்சித் தரை மட்டமாக்கிட்டாங்க... நகையெல்லாம் எடுத்துக்கிட்டாங்க... இவங்களும் இவங்க கணவன்மார்களும், கொழந்தைங்களும் இந்த மேல முட்டத்தில ஒவ்வொரு வீட்லயும் ஒரு குடும்பம், ரெண்டு குடும்பம்னு அகதிகளா வாழுறாங்க..."

"நீங்க இடிஞ்சு போன வீடுங்களையெல்லாம் காட்ட முடியுமா?"

"போ... போம்மா... போய்க் காட்டிட்டு வா..."

அவர்கள் தயங்கிச் சம்மதித்தார்கள்.

"கொஞ்சம் இருங்கம்மா..." என்றோம். "வக்கீல் சார்... என்ன நடந்துதுன்னு விவரமாச் சொல்லுங்க..." என்றோம்.

வக்கீல் சார் எங்களைக் காற்றோட்டமான ஒரு மொட்டை மாடியில் அமர வைத்தார்.

"இதில ஜாதிப் பிரச்னை இல்லே... எல்லாரும் மீன்பிடித் தொழிலுக்குப் போறவங்க... ரெண்டு பசங்க டீக்கடையில சண்டை போட்டாங்க... அப்போ அதை யாரும் பெரிசா எடுத்துக்கலே. ஆனா இந்த முட்டம் கிராமம்கீழ முட்டம்மேல முட்டம்னுரெண்டு பகுதியா இருக்கு. இதில மேலமுட்டத்துக்காரங்களுக்கும், கீழமுட்டத்துக்காரங்களுக்கும் ஒத்துப் போறதில்லே. மேல முட்டத்திலேர்ந்து ஹென்றிங்கறவர் கள்ளுக் குடிக்கப் போனாரு. அந்த ஆளைப்போட்டுக்கீழமுட்டத்தில் இருக்கறவங்க வெட்டிட்டாங்க... எல்லாம் அந்த டீக்கடை சண்டையால. எப்படி வெட்டுனாங்க தெரியுமா? கன்னத்துல ஒரு வெட்டு. அப்படியே கன்ன எலும்பு பேர்த்துக்கிச்சு. சைட் வழியா பார்த்தா கண்ணோட வெள்ளைப்பரப்பு கோழி முட்டை மாதிரி தெரியுது. மண்டையில ஒரு வெட்டு. முதுகுல ஒரு குத்து. ஆனா அந்த ஆளு தப்பிச்சுக்கிட்டாரு. அது நடந்து கொஞ்ச நாள் கழிச்சு கீழமுட்டத்தில இருக்கிற பனிப்பிச்சைங்கிற ஆளை வெட்டிட்டாங்க..."

"யாரு வெட்டினது? ஹென்றியோட ஆளுங்களா?"

"யாருன்னு அடையாளம் சொல்ல முடியலேங்க.... வெட்டிட்டாங்க.... பனிப்பிச்சை ஆஸ்பத்திரியிலே சேர்க்கப்பட்ட ஒன்பதாவது நாளு இறந்து போயிட்டாரு...."

"அப்புறம்?"

"இதோ இப்பக் காட்டினேனே... இவங்களெல்லாம்கீழ முட்டத்திலேயே இருந்தவங்கதான்.. இவங்களும் மீன்பிடிச்சி வாழ்ந்தவங்கதான். ஒரு பதினாறு குடும்பம் இருக்

கும். இந்தப் பதினாலு குடும்பத்தையும் நடந்து போன அந்தக் கொலைக்கு ஆதரவா இருந்த குடும்பம்னு சொல்லி அத்தனை பேரையும் அந்த இடத்தை விட்டே துரத்திட்டாங்க...''

''எங்க பொம்பளைங்களையெல்லாம் அந்த ஆளுங்க மானபங்கப் படுத்தப் பார்த்தாங்க'' என்றார் அமைதியாய்க் கேட்டுக் கொண்டிருந்த ஒருவர். லூயிஸ் என்று அறிமுகப்படுத்தப்பட்டார்.

''இவங்க வீட்டையெல்லாம் இடிச்சுத் தரை மட்டமாக்கிட்டாங்க... நைலான் வலைங்க, கட்டுமரங்கள், நகைகள், ரூபாய்கள் அத்தனையும் கொள்ளையடிச்சிட்டாங்க...

''எங்க பொருளையெல்லாம் கடற்கரையில வெச்சிக் கொளுத்திட்டாங்க சார்...'' என்றார் அந்தோணி அடிமை. பாதிக்கப்பட்ட குடும்பத்தைச் சேர்ந்த இன்னொருவர்.

''ஓடி வந்தவங்க இங்கே அகதிகளா இருக்காங்க... கூலி வேலை செய்யறாங்க.. எனக்கு ரெண்டு க்ரூப் காரர்களும் சிநேகம் தான். நான் யார் மேலயும் எந்தவிதப் புகாரும் சொல்லலை. ஆனா இந்த வீடிழந்த குடும்பங்களுக்கு மறுபடி வீடு வேணும்...'கொள்ளையடிக்கப்பட்ட பொருட்களையெல்லாம் மீட்டுத் தரணும். இதைப் பற்றி போலீஸ் டிபார்ட்மெண்ட்டுக்கும் சரி, எம்.எல்.ஏ.வுக்கும் சரி, கலெக்டருக்கும் சரி... சொல்லியாச்சு.... யாரும் கண்டுக்க மாட்டேங்கிறாங்க... அந்த நைலான் வலைகளையெல்லாம் பீச்ல போட்டுக் கொளுத்தறப்ப போலீஸ் வேடிக்கை பார்த்துக்கிட்டு இருந்ததுங்க..''

''போலீஸ் இங்கே வந்ததா?

''இந்த ஊர்ல போலீஸ்காரங்க காம்ப்பே போட்டாங்க. ஆனா இதுவரைக்கும் எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கப்படலை...''

நாங்கள் ஃபோட்டோ எடுப்பதற்காக ஆயத்தங்கள் செய்தோம்., பாதிக்கப்பட்ட குடும்பத்தைச்சேர்ந்தவர்கள் உடன்கைகளைக் கட்டிக் கொண்டார்கள்.

''கையைக் கட்டாதீங்கப்பா... இப்படி எதுக்கும் கையைக் கட்டிக் கட்டியே...'' என்று இழுத்தார் வக்கீல் வின்சென்ட். அவர்கள் கட்டிய கைகளை எடுக்கவில்லை.

க்ளிக்!

''இவர்தான் வெட்டுப்பட்ட ஹென்றி.''

க்ளிக்!

''நீங்க அந்தஎடத்தைப்போய்ப்பாருங்க... கூட்டிட்டுப் போங்கம்மா,...''

கீழமுட்டத்திற்கு அந்தப் பெண்கள் எங்களை ஒரு சுற்று வழியில் அழைத்துச் சென்றார்கள். ஒரு மேட்டை நெருங்கியவுடன் நின்றார்கள். சரிவை நோக்கிக் காட்டினார்கள். ஓர் இடிந்த வீடு தென்பட்டது. க்ளிக்!

''இந்த எடந்தாங்க...'' என்று அவர்கள் சொல்லி முடிக்குமுன் சரிவில் இருந்த சாலையில் இருந்த மக்கள் எங்களைப் பார்த்துவிட்டார்கள்: எங்களுடன் வந்த பெண்களைப் பார்த்துவிட்டார்கள். ஆவேசம் அவர்களிடம் சட்டென்று குடியேற, அவர்கள் எங்களை நோக்கி ஓடிவரத் தொடங்கினார்

அருள்வாக்கு



''கோவிந்த'' என்கிற நாமம் ரொம்பவும் விசேஷமானது. ஈசுவர நாமாக்களுக்குள் 'ஹர' என்பதற்கும் விஷ்ணுவின் நாமாக்களுக்குள் 'கோவிந்த' என்பதற்கும் ஒரு தனிச்சிறப்பு உண்டு.

ஸத்ஸங்கத்துக்காக, ஸத் விஷயத்துக்காகப் பல பேர் கூடினாலும், மனுஷ்ய ஸ்வபாவத்தில், கொஞ்ச நேரம் போனதும் கூட்டத்தில் பலர் பல விஷயங்களைச் சளசளவென்று பேச ஆரம்பிக்கிறார்கள். அவர்கள் பேச்சை நிறுத்தி பகவானிடம் மனஸைத் திருப்புவதற்கு என்ன செய்கிறோம்? யாராவது ஒருத்தர் ''நம: பார்வதீ பதயே'' என்கிறார். உடனே பேசிக் கொண்டிருந்த எல்லாரும் 'ஹர ஹர மகாதேவா' என்கிறார்கள். அதற்கப்புறம் ஒரு பஜனையோ உபந்யாஸமோ ஆரம்பிக்கிறது. இப்படிப் பல பேருடைய மனஸை ஈச்வரனிடம் லகான் போட்ட மாதிரி இழுக்கிற சக்தி ஹர நாமத்துக்கு இருக்கிறது! அரன் நாமமே சூழ்க; வையகமும் துயர் தீர்கவே என்று ஞானசம்பந்தக் குழந்தை வாழ்த்திய விசேஷத்திலேயே இப்படி ஹரன் நாமத்துக்குச் சிறப்பு ஏற்பட்டிருக்கிறது!

'நம பார்வதீ பதயே' மாதிரியே இன்னொன்றும் ஒரு கூட்டத்தின் மனஸை பகவத்பரமாகத் திருப்பி விடுவதற்காகக் கோஷிக்கப்படுகிறது. அதுதான் ''ஸர்வத்ர கோவிந்த நாம ஸங்கீர்த்தனம்'' என்பது. இப்படி ஒருத்தர் சொன்னவுடன் கூட்டம் முழுவதும் ''கோவிந்தா, கோவிந்தா'' என்கிறது. 'பஜகோவிந்தம்' என்று நம்முடைய ஆசார்யாள் குழந்தையாயிருந்தபோதே சொன்னதன் மஹிமை!

''அண்ணாமலைக்கு அரோஹரா'' என்று லக்ஷோப லக்ஷம் பக்தர்கள் சேர்ந்த பொழுது கோஷிக்கிறோம். காவடி எடுக்கிறபோது ஸுப்ரமண்ய ஸ்வாமிக்கும் 'அரோஹரா' போடுகிறோம். அரநாமமே சூழ்கிறது. இப்படியே நித்ய உத்ஸவமாக இருக்கிற திருப்பதியில் லக்ஷோபலக்ஷம் ஜனங்களும் 'கோவிந்தா' போட்டுக்கொண்டேதான் மலையேறுகிறார்கள்.

இரண்டு தெய்வக் குழந்தைகளின் வாக்விசேஷம்!

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

கள். கெட்ட வார்த்தைப் பரிமாறல்கள். எங்களுடன் வந்தவர்களை நாங்கள் விலகுமாறு சொல்ல, அவர்கள் தயங்கிப் பின் வாங்க, தலைமுடிகள் இழுபட்டன. மண் வாரி யிறைக்கப்பட்டது. சின்னச் சின்ன செம்மண் கற்கள் பறக்கத் தொடங்கின.

''ஐயையோ... ஐயையோ... போட்டா புடிக்கவந்தியளா... வாங்க... என்னை ஆண்ட ராசா போனதைக் கேட்டுப் போக வந்தியளா... வாங்க'' என்று ஒரு பெண்மணி வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு ஒப்பாரி வைக்கத் தொடங்க... எங்கள் வயிற்றில் ஒரு குத்தூசியைச் செருகி எடுத்தாற்போல் இருந்தது.

''அம்மா கொஞ்சம் அமைதியா இருங்கம்மா... என்ன ஆச்சுன்னு சொல்லுங்கம்மா...''

''ஐயோ... ய்யோ... நான் எதைச் சொல்லுவேன்...! ஒறங்கப் போன என் ராசாவை மீனை அரியறமாதிரி அரிஞ்சி கொன்னுட்டாங்களே...'' அந்தப் பெண்மணிக்கு உணர்ச்சிகள் எல்லையை உடைத்துக் கொண்டு புரண்டதில் வார்த்தைகள் புரளவில்லை. தோளில் போட்ட துண்டுடன், கட்டான உடலுடன் எங்களைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்த ஒருவரைப் பார்த்துச் சிநேகமாகப் புன்முறுவல் செய்தோம்.

''என்ன ஆச்சுன்னு நீங்க சொல்லுங்க...'' என்றோம். அவர் தன்னை, செத்துப் போன பனிப்பிச்சையின் மூத்த மருமகன் 'ஜான்' என்று அறிமுகம் செய்து கொண்டார்.

''ஒருநாள் விடியக்காலை அஞ்சு மணி இருக்கும். கடல்புறத்தில் படுத்துக்கிட்டிருந்த இந்தம்மாவோட புருஷனை ஒரு ஏழெட்டு பேர் கத்தி நின்னுக்கிட்டு வெட்டிட்டாங்க.''

''ஐயோ... கத்தியிலே இருந்த ரத்தத்தை எடுத்து நெத்தியிலே பூசிக்கிட்டாங்களே... பாவிங்க... நெத்தியில பூசிக்கிட்டாங்களே...'' கணவனைப் பறிகொடுத்த அகஸ்தினம்மை ஆற்ற முடியாமல் நடுநடுவே அழுகையினூடே குமுற, மெல்ல மெல்ல அவர்கள் கட்சி வாதம் வெளிப்பட்டது.

''அவரை வெட்டினப்புறம் இன்னும் அஞ்சு பேரைப் படுகாயப்படுத்திட்டாங்க.''

''வெட்டுப்பட்டவர் பேர் என்னங்க?''

''பனிப்பிச்சைங்க... அவரு ஒடம்பு முழுக்க ரத்தம். அவரை ஆஸ்பத்திரிக்குக் கூட்டிட்டுப் போறதுக்காக ஒரு டாக்ஸி கொண்டு வந்தோம். டாக்ஸியில அவரை ஏத்திட்டாங்க. ஆனா டாக்ஸியை எடுக்க விடலை அவுங்க... டாக்ஸியை எடுத்தா டிரைவரைத் தீர்த்துக் கட்டிடுவோம்னு மிரட்டியிருக்காங்க... அதனாலே டிரைவர் வண்டியை எடுக்க மாட்டேன்னுட்டாரு... அப்புறம் போலீஸ் வந்தப்புறம் அந்த போலீஸ் வான்லதான் அவரைக் கொண்டு போய் ஆஸ்பத்திரியில சேர்த்தோம்.''

''நாங்கள்ளாம் இங்க யாருமே இல்லை. அவரை அந்த மாதிரி வெட்டிட்டு எங்க வீட்ல இருக்கற பொருள்களையெல்லாம் கொள்ளையடிச்சிட்டுப் போய்ட்டாங்க...'' என்றார் ஜான்.

''இந்த வீடெல்லாம் இப்படி இடிஞ்சி கெடக்குதே...''

''அவங்கதான் போகும்போது ஓட்டையெல்லாம் உருவிக்கிட்டுப் போய்ட்டாங்க.. அப்புறம் மழை பெய்ஞ்சதிலே வீடெல்லாம் இப்படி இடிஞ்சி போய்ட்டுது...''

''அவங்கன்னா யாரு...?''

''அந்தக் கொலைகாரப் பாவிங்களைச் சேர்ந்தவங்கதான்!''

''அவங்க ஏன் ஓடினாங்க?''

''போலீஸுக்குப் பயந்துக்கிட்டுத்தான்... எங்க வலைகளையெல்லாம் எடுத்து, எங்க கட்டுமரங்களையெல்லாம் இழுத்துப்போட்டு, கடல்புரத்தில வெச்சிக் கொளுத்தினாங்க... போலீஸ் பார்த்துக்கிட்டே நின்னது. அவர்கள் பயந்து ஓடின பிற்பாடுதான் நாங்க இங்கே வந்தோம். இப்ப ஊர்க்கட்டு என்னன்னா, நாங்க அந்த மேலமுட்டம் பக்கம் போகக் கூடாது. அவுங்க இந்தப் பக்கம் வரக்கூடாது.. தப்பித் தவறி நாங்க யாராவது அந்தப் பக்கம் போனா அடிப்பாங்க... எங்களுக்குப் பஸ் ஏறக் கூட வழியில்லே... இந்தப் பக்கம் எங்கேயோ சுத்திக்கிட்டுப் போய் பஸ் ஏறவேண்டியிருக்குது. அந்த மவராசன் ஆஸ்பத்திரியிலே சேர்ந்த ஒன்பதாவது நாள் செத்துப் போயிட்டாரு... எங்க குடும்பங்களை அழிச்சிட்டு அவுங்க நிம்மதியா இருக்காங்க... இந்த அகஸ்தினம்மை, அவங்களோட இன்னும் கல்யாணமாகாமல் இருக்கும் ஆறு பெண்கள், ஒரு பையன். அவனும் நொண்டி... இப்ப அந்தக் குடும்பம் சாப்பாட்டுக்கே இல்லாம கஷ்டப்படுது... எங்களுக்கு மனசு எப்படிக் கொதிக்கும்?''

''அவங்க சொத்துக்களையெல்லாம் நீங்க கொள்ளையடிச்சிட்டதாச் சொல்றாங்களே...?''

''அவங்களே தூக்கிட்டு ஓடிட்டாங்க... போய்ட்டு இந்த மாதிரி புரளி கௌப்பி விடுறாங்க. போலீஸ், 'நீங்க சும்மா இருங்க, சமாதானம் பண்றோம்னு' சொல்லியிருக்காங்க. அப்படி சரியா நீதி கெடைக்கலே, இந்த இடத்திலே மனித சமுதாயமே இருக்காது... ஆமாம்... மனித சமுதாயமே இருக்காது!''

ஜானின் குரல் ஓங்கியிருந்தது. அவரைச் சுற்றி நின்ற முகங்களில் நிறைய எதிர்பார்ப்புகள் இருந்தன. நிசப்தம் இருந்தது. பின்னால் கடலில் அலைகள் சீறிக் கொண்டிருந்தன. நாங்கள் புறப்பட்டோம். அகஸ்தினம்மையின் குடும்பம் ஏக்கப் பார்வையுடன் நின்றது. எந்தக் கட்சி நிஜம்? எங்களுக்குத் தெரியவில்லை.

ஒரு மணல் மேட்டைக் கடந்தபோது அந்தக் கடற்கரைச் சாம்ராஜ்யம் கண்ணில் விரிந்தது. வானைத் தொட முயன்ற சர்ச், மரங்கள், வீடுகள், குடிசைகள், படகுகள், கட்டுமரங்கள்... அலைகள்... அலைகள்... கடல், பரந்த கடல், அமைதி.

அவ்வளவு அமைதியாகக் காட்சியளிக்கும் அந்த இடத்தில் ஒரு தீப்பொறி ஒரு பெரு நெருப்பாக வளர்ந்து அடங்கி, ஆனால் இன்னும் கனன்று கொண்டுதான் இருக்கிறது.

இந்த நெருப்பை அணைக்கப் போவது யார்? மறுபடி பெருநெருப்பாக மூண்டெழுவதைத் தடுக்கப் போகிறவர் யார்?



Blackbelt

# Blackbelt

## BRIEFS & BANIANS

For strong ones
who wish to remain in style and comfort.

[illegible]
BRIEFS.



Sultan
BANIANS



BOXER
TRUNKS



FIANCEE
COMFORT BRIEFS



SAHEB
BANIANS



MARSHALL
BRIEFS



ARMS-AH-185-1

Quality Products of Aristocrat Hosiery Pvt. Ltd.
Post Box No. 3359, Bombay-400 003. Tel: 321861 • 330251

## பழையாறைப் பயணம்

விரிசடையோனின் விம்மிய ஒளி முகம் போலக் கதிர்சடையோன் ஞாயிறு ககன மார்க்கப் பயணத்தைத் தொடங்குகிறான்.

காலைப் பண்பாடும் புள்ளினங்கள் 'கங்கை கொண்ட சோழீச்சரா' என்று கீதம் இசைக்க...

ஆலய மணியோசை அந்தத் தலைநகரையே ஆனந்தத்தில் மூழ்கச் செய்கிறது.

தஞ்சையில் மாமன்னன் ராஜராஜ சோழன் கண்ட பெருவுடையான் கோயிலைப் போல், அவருடைய திருக்குமாரன் ராஜேந்திர சோழன், 'புலிக்குப் பிறந்தது புலியே' என்பதை நிரூபிப்பதுபோல் இந்தப் புதிய தலைநகரை — கங்கை கொண்ட சோழபுரத்தை — உருவாக்கியது போலவே, இங்கே ஒரு திருவுடையான் கோயிலையும் எடுத்தானே... அதுவன்றோ வியப்புக்கு விருந்து வைத்து வியக்கச் செய்கிறது!

காலை வழிபாட்டை முடித்துக் கொண்டு ஆலயத்தை விட்டுப் புறப்படுகிறார் மாண்புமிகு முதலமைச்சர் சேக்கிழார்.

அப்போது ஒரு சிந்தனை...

அங்கு, தஞ்சைப் பெருவுடையான் கோயிலைப் போலவே இந்தத் திருவுடையான் கோயிலிலும் நாயன்மார்களின் சிற்ப சித்திரங்கள் இருக்கின்றனவாமே! பார்வையிட்டால் என்ன என்று தோன்ற, அவற்றைச் சித்த சுத்தியுடன் கவனிக்க முனைகிறார்.

ஜல்...!

எங்கோ ஜோதியின் பாதச் சிலம்பு பண்ணிசைப்பது போன்ற பிரமை...

சுந்தரரின் திருத்தொண்டர் தொகை ஒலிப்பது போன்ற உணர்வு...

நம்பியாண்டார் நம்பியின் திருத் தொண்டர் திருவந்தாதி ஒலிப்பது போன்ற மயக்கம்...

தத்தஜம்... தகிட தத்தஜம்... தகதகிட தத்தஜம்...

சிந்தாகாயத்தில் சிற்பமாய் ஜோதி ஆடுகிறாள்; சித்திரமாய் ஜோதி ஆடுகிறாள்; சிங்காரமாய் ஜோதி ஆடுகிறாள், ஆடுகிறாள், ஆடுகிறாள்...

சந்நிதானத்தில் ஓதுவார் ஒருவர், 'பித்தா பிறைசூடி' என்று கணீரென்ப் பாடுவது காதுகளை நாடிக் கருத்தில் உறைகிறது...

ஜோதி, ஜோதி, ஜோதி...

என்னைப் பித்தனாக்கி, நீயும் பித்தாகி, பிறகு சித்தாகி, சிவமாகி ஆடிய ஆட்டம்... சிதாகாச ஆட்டம்...

தஜம்; தகதஜம்; தகஜுனுதஜம்...!

ஓ... ஜோதி எப்படியெல்லாம் ஆட்கொண்டு விட்டாள்...

அந்தக் கபாலிகள்... கபாலிகள்...

கபாலீச்சுரரே மயிலையிலிருந்து ஜோதியைத் துணை கொண்டு என்னைச் சோதிக்க வந்தாரோ?

தூய மால்வரை ஜோதியில் மூழ்கி, மூழ்கி, மூழ்கி...

சிவ நிலையிலிருந்து பவநிலைக்கு வந்த சேக்கிழார், கோயிலை விட்டு வெளியே வருகிறார்.

அரசப் பரிவாரங்கள் அணிவகுத்து நிற்கின்றன.

பல்லக்கில் அமர்ந்து பயணிக்கிறார். மக்கள் மனமார வாழ்த்துகிறார்கள். ஒரு பொன்மனத்துப் புனிதர் முதலமைச்சராக வந்துவிட்ட பூரிப்பு போலும்!

சோழநாட்டுப் பரிபாலனங்களைப் பற்றிப் பல்லக்கில் பயணித்தவாறே யோசிக்கிறார்.

தெற்கே பாண்டிய நாடு முதல், வடக்கே கிருஷ்ணையாறு வரை பரந்து விரிந்த சோழப் பேரரசின் சுமை கனப்பதை உணருகிறார்...

குளிர்ந்த காற்று அவரது தமிழ் நெஞ்சை இதமாக வருடி வாழ்த்திச் செல்கிறது.

அரண்மனை வாயிலில் பல்லக்கு இறக்கப்படுகிறது.

பொன்னாலும் மணிகளாலும் அலங்கரிக்கப்பட்ட வாசலுள் நுழைகிறார்.

முதல் சோதனையாக ஒரு சோகச் செய்தி அவருக்காகக் காத்திருக்கிறது என்பதை அறியாமல் வாசல்களைக் கடந்து சென்று கொண்டே இருக்கிறார்...

ஆனாலும் அரண்மனையின் மௌனம் அவருக்கு ஏதோ ஒன்றை உணர்த்தியவாறு இருக்கிறது.

முதல் மாடத்து முத்துக் கூடத்தில் சோழ மாமன்னன் குலோத்துங்கன், பின்னங்கை கட்டிக் கொண்டு புலியென அடி வைத்து உலவிக் கொண்டிருக்கிறான். அவன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பது முதலமைச்சரின் வருகையை!

சோதனைச் செய்தி கொண்டு வந்தவர்கள் தொலைவில் நிற்கிறார்கள்.

அமைச்சர்களான விக்கிரம சோழ சம்புவராயரும், ஏழிசை மோகன் காடவராயரும் அருகாமையில் நிற்கிறார்கள். சோழ மகா

# மாண்புமிகு முதலமைச்சர்

கோவி. மணிசேகரன்



தண்ட நாயகன் நாலூரான் சற்றே தள்ளி அமைதியான ஆலோசனையுடன் எதனையோ பரிசீலிப்பவன் போன்று கவனிக்கிறான். இவன், இக்காலத்தே வைணவ மதத்து வைர முடியாய் அவதரித்திருந்த இராமானுசரின் மதத்தைச் சார்ந்தவன்.

முத்துக் கூடத்தையடைந்த முதலமைச்சர் சேக்கிழார், "வணக்கம் மன்னா!" என்றார்.

"வாருங்கள் சேக்கிழாரே! கோயிலுக்குச் சென்றிருப்பதாக அறிந்தேன். ஒரு சோதனையான செய்தி வந்திருக்கிறது. உங்கள் தியான நேரத்தைக் கெடுக்கக் கூடாதென்றுதான், வருகைக்காகக் காத்திருந்தேன்."

"சோதனையா? என்ன மன்னா?"

"அமருங்கள் சொல்லுகிறேன்."

"நீங்களும் அமரலாமே!"

"அமைச்சரே! உங்களைப் பொறுத்த வரையில் ஒன்றைப் பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன். இந்த அரசில் ஆசான் ஒட்டக்கூத்தருக்கு எவ்வளவு செல்வாக்கு இருக்கிறதோ, இதில் எள்ளளவும் குறையாத செல்வாக்கு உங்களுக்கும் உண்டு. நான் சோழப் பேரரசின் மன்னன். நீங்கள் தமிழ்ப் பேரரசுக்கே மன்னர்! இந்த மரியாதை சம்பிரதாயங்கள் வேண்டாம். அமருங்கள்."

சேக்கிழார் அருகிலிருந்த ஆசனங்களில் ஒன்றில் அமர்ந்தார்.

நின்று கொண்டிருந்த பழைய அமைச்சர்களின் கண்களைப் பொறாமை நிமிட்டின.

மகாசேனாதிபதி நாலூரான் இதனையும் பரிசீலிக்கிறான்.

சேக்கிழார் பேச்சைத் தொடங்கினார்: "சோதனைச் செய்தியைச் சொல்லி முடிக்கலாமே மன்னா!"

"எனது ஆட்சியில் முதன் முறையாக இப்படிப்பட்ட சோதனை நிகழ்ந்திருக்கிறது. நிரம்பி வழிந்து கொண்டிருந்த முடிகொண்டான் பேரேரியை யாரோ சதி செய்து உடைப்புக் கொள்ளச் செய்துவிட்டனர். அந்த நீர்த் தேக்கம் உடைபட்டதால், குடந்தைப் பகுதியில் இருக்கிற நஞ்சை நிலங்கள் அனைத்திலுமே பயிர் நாசமாகி விட்ட செய்தி காலையில்தான் வந்தது. இது தானாக உடைப்பு கண்டதல்ல; உடைப்பு காணும் பருவ காலமும் இதுவல்ல! யாரோ வேண்டுமென்றே செய்த சூழ்ச்சி என்று அப்பகுதி மக்கள் கருதுவதாகச் செய்தி வந்திருக்கிறது. அறுவடைக்கு ஆயத்தமான நெற்பயிர்களனைத்தும் சேதமாகிவிட்டனவாம். விவசாயிகளின் வியர்வைத்துளிகள் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டு வீணாகி விட்டன. அவர்களுடைய கண்ணீரைத் துடைக்க வேண்டிய சோதனை என் காலத்தில் முதன் முதலாக ஏற்பட்டிருக்கிறது, சேக்கிழாரே!"

"உங்கள் காலத்தில் என்று சொல்ல வேண்டாம் சோழ மன்னா! நான் முதலமைச்சர் பதவி ஏற்றதும் முதன் முறையாக வந்த சோதனை இது!"

'பளிச்'சென்று எழுந்து' கொண்டார் சேக்கிழார்.

தமது காலத்துச் சோதனை என்று சேக்கிழார் சொன்னதும் அதுவரை ஆழ்ந்து பரிசீலித்து வந்த மாதண்ட நாயகன் நாலூரானுக்கு 'தம் 'பளிச்'சென்று ஓர் எண்ணம் உதயம் கண்டது. 'ஏன், இப்படியும் இருக்கக் கூடாது? எதனையும் தீர ஆராய்ந்து முடிவு செய்வோம்' என்று கண்கள் பரபரக்க மௌனமாய் நின்றான்.

"சோழ மாமன்னா! நான் இக்கணமே பழையாறை நோக்கிப் பயணமாகிறேன். தடுக்க வேண்டாம். எனக்குக் கிடைத்த முதல் சோதனை, எங்கிருந்து எப்படி முளைத்தது என்பதை ஆராய வேண்டும்; அதே

நேரத்தில் பாதிக்கப்பட்ட மக்களுக்கும் ஆறுதல் சொல்ல வேண்டும். இதுவே ஒரு முதலமைச்சனுக்குரிய கடமை.

சோழமாமன்னன் குலோத்துங்கன் தடுக்க வில்லை.

அப்போது மாதண்ட நாயகனை நாலூரான் வேண்டினான்: "சோழேச்சுரா! நானும் முதலமைச்சருடன் சென்று திரும்புவது கடமை என்று நினைக்கிறேன்!" என்றான்.

"நீங்கள் எதற்கு மாதண்ட நாயகரே?"

"இந்தச் சோதனையை இயற்கை ஏற்படுத்தவில்லை என்னும்போது எதிரிகள் ஏற்படுத்தியதாகத்தான் கருத வேண்டும். எதிரி என்றதுமே அங்கு மாதண்ட நாயகனுக்குப் பொறுப்பு வந்துவிடுகிறது. எதிரி நமது நாட்டுக்கு வெளியே இருந்து வந்தவனா; உள்ளேயே இருப்பவனா என்று ஆராய வேண்டும். எவ்வாறாயினும் ஒன்று புரிகிறது. அரசில் சில அதிகார மாற்றங்கள் தேவைப் படுகின்றன."

"நாலூரார் சொல்வதில் ஏதோ மர்மமிருப்பதாகத் தெரிகிறது."

"பழையாறை சென்று திரும்பியதும் விளக்குகிறேன், சோழர்பிரானே!"

"அமைச்சரே! உங்கள் விருப்பம்போல் முடிகொண்ட சோழபுரம் சென்று திரும்பலாம். நாலூரார் அவசியமா?"

"அவர் அவசியம் என்று கருதுகிறபோது அழைத்துச் சென்றுதான் திரும்புகிறேனே!"

"புறப்படலாம்; அமைச்சரைக் கவனமுடன் அழைத்துச் சென்று அழைத்து வாருங்கள், நாலூராரே!"

"நான் செல்வதே அதற்காகத்தானே மன்னர் பெருமானே!"

பழையாறைப் பயணத்துக்கான ஆயத்தங்கள் வேகவேகமாக நடைபெற்றன.

மூன்று நாழிகைப் போதுக்குள் பயணம் பழையாறை நோக்கியது.

**தே**ரின் மேவிய செழுமணி வீதிகள் சிறந்து காணப்படும், பாரில் நீடிய பெருமை சேர் பழையாறையை அடைந்து, அங்கிருந்த சோழர் மாளிகையில் ஓய்வு கொள்கிறார் மாண்புமிகு முதலமைச்சர்.

மகாசேனாதிபதி நாலூரானும் ஓர் தனியறையில் ஓய்வு கண்டான். இதில் வேடிக்கை என்னவென்றால் சேக்கிழார் பரிசுத்த வீர சைவர். நாலூரானோ வைணவத்தின் வாரிசு. இப்போர்ப்பட்டவனைச் சேக்கிழார் கவர்ந்தது தான் வியப்பிலும் வியப்பு.

தங்கள் குறைகளை நேரில் கண்டும், கேட்டும் அறிய சோழ முதலமைச்சரே வருகை தந்திருக்கிறார் என்கிற பெருமைக்குரிய செய்தி, பழம்பெரும் சோழர் தலைநகரான பழையாறையை மட்டுமல்லாது, குடந்தையையும் அதனைச் சூழ்ந்த பகுதிகளையும் எட்டிச் செவிகளை இனிக்கச் செய்தது.

இவரல்லவா முதலமைச்சர்! மாண்பு என்கிற மாட்சிமை நிறைந்த சொல்லுக்குப் பொருத்தமான மகாமானுடம் என்பது இதுதானோ?

வானத்துக்குக் கதிரவன் மாலையணிவித்ததும், சேக்கிழார் புறப்படவிருந்தார். புறப்



1 2 3 4 5

# Now HINDUSTAN FINANCE Can turn you into a financial genius in FIVE different ways.

1. Fixed Deposits guaranteed by registered mortgage deed.
2. Short term notice deposits.
3. Fixed deposit guaranteed by Cash Certificate From Government owned public Limited Companies
4. Fixed Deposit guaranteed by Bank Cash Certificate.
5. 3 year Cumulative time Deposit.

**HINDUSTAN FINANCE:**

In 7 years of dedicated service HINDUSTAN FINANCE have built up an enviable reputation as investment consultants and trustees, mortgage financiers, approved layout promoters township elevators and estate agents. They will protect your investments by providing 100% security.

The Company started business with a Simple goal-promoting savings amongst people. They have succeeded admirably. Today they offer unique investment schemes for small medium and big investors.

1. FIXED DEPOSITS GUARANTEED BY REGISTERED MORTGAGE DEED SCHEME

**LAND ON AN OPPORTUNITY OF A LIFETIME.**

A unique Scheme-introduced for the first time in India. This Scheme protects it with a Registered Mortgage of a Government approved Housing Plot. Remember your guaranteed plots will go up in value several times by the time of maturity which means maximum protection to your investment.

| Nature of deposit | period of deposit | Rate of interest |
|---|---|---|
| Fixed Deposit | 12 months | 15% |
| Fixed Deposit | 18 months | 18% |
| Fixed Deposit | 24 months | 20% |
| Fixed Deposit | 36 months | attractive interest. |

2. SHORT TERM NOTICE DEPOSIT SCHEME.

**MONEY GROWS IN NO TIME AT ALL**

The minimum deposit is Rs. 1000/- to be deposited for 70 days/160 days Under this scheme the depositor can get back the deposit only after a minimum period of 2/6 months after giving notice of 70 to 160 days respectively.

3. YOUR DEPOSITS GUARANTEED BY CASH CERTIFICATE FROM GOVERNMENT OWNED COMPANIES

**FIRST TIME IN INDIA**

Your fixed deposit is guaranteed by cash certificate from government owned public limited companies. This unique short term scheme has been introduced for the first time. Under this scheme the principal will earn interest at 20% p.a. payable monthly.

4. YOUR FIXED DEPOSIT GUARANTEED BY BANK CASH CERTIFICATE

**'BANK ON GOOD RETURNS'**

Make a minimum deposit of Rs. 5,000/- and get a cash certificate in your favour from a Nationalised Bank of your choice. The repayment of your deposit after maturity is guaranteed.

**100% Security only HINDUSTAN FINANCE Guarantees your investment**

**We don't Advertise 100 times to make our point**

Our Depositors Come Invest and feel secure! Do we need to say more?

5. 3 YEAR CUMULATIVE TIME DEPOSIT SCHEME.

An attractive scheme which any depositor would love to avail of.

The people behind financial miracles, Hindustan Finance have with vision and foresight, become a name to reckon with. Hindustan Finance are pioneers in this field of activity.

Come to Hindustan Finance because only we can play the role of investment trustees to perfection.

I want to turn into a financial genius. Rush me information on

- Fixed Deposits guaranteed by registered mortgage deed.
- Short term notice deposit Scheme.
- Your Fixed Deposit guaranteed by Bank Cash Certificate.
- 3 year Cumulative Time Deposit Scheme.
- Your Deposit guaranteed by Cash Certificate from Government owned Companies.

Name ________
Address ________

For Details contact:

**HINDUSTAN FINANCE** (Regd)

**12, Ramaswamy Street, Theagaraya Nagar, Madras-600 017. Phone: 441448.**

SATURDAY HOLIDAY SUNDAY WORKING DAY



''ஏங்க இந்த சுடுகாட்டைச் சுற்றி போலீஸ்காரங்க நிக்கிறாங்க?''

''நாளைக்கு இங்க தேர்தலாச்சே! செத்தவங்க எழுந்திருச்சு வந்து ஓட்டுப் போட்டுடக் கூடாதேங்கிற எச்சரிக்கைக் காகத்தான்!''

— ப. இ. இக்பால்.

படுமுன் அந்த மாளிகையைப் பார்வை இடுகிறார்.

தமிழுக்கு உயிர் கொடுத்த கழற்சிங்கனை — நாயனாரான — (மூன்றாம்) நந்திவர்ம பல்லவச் சக்கரவர்த்தி கட்டிய 'இந்த மாளிகை, பின்னால் இராஜராஜ சோழ மாமன்னனால் மேலும் பல மாடங்களைக் கண்டதல்லவா? மதிநுட்ப மாது பெரிய குந்தவைப் பிராட்டியார் வாழ்ந்த மாளிகையல்லவா இது? சிவத் தொண்டே பவத் தொண்டு என்று சீரிய தொண்டாற்றிய செம்பியன் மாதேவியார் திருப்பாதங்கள் பட்ட மாளிகையல்லவா இது?

'கழற்சிங்கனுக்கு அடியேன்' என்று பாடிய வரி நினைவுக்கு வருகிறது. சுந்தரமூர்த்தி நாயனார் இந்த நந்திவர்மனை எப்படியெல்லாம் ஆட்கொண்டார்! அந்த அடியாரின் மாளிகையில் தங்கி இளைப்பாற என்ன தவம் செய்தோம்?

இந்தப் பழையாறை, நந்திவர்மனால் நந்திபுரம் என்றும், இராஜேந்திர சோழ மாமன்னனால் முடிகொண்ட சோழபுரம் என்றும் பெயர் மாற்றம் கண்டாலும், பழையாறை என்ற பெயர் பிழைபடாமல் தொடர்ந்தது.

பல்லக்கில் சேக்கிழார் அமர்ந்து கொள்ள, பரியில் நாலூரான் ஆரோகணிக்க.. பரிவாரங்கள் சூழப் பயணம் முடிகொண்டான் ஏரியை நோக்கி நீளுகிறது.

மக்கள் கூட்டம் மதில் அரண் போல உடன் தொடருகிறது.

வழிநெடுக நல்ல விளைச்சல் நிலங்கள் பாழாயிருந்த பயங்கரக் காட்சியைப் பார்வை இடுகிறார்...

சதி செய்வதற்கும் ஓர் எல்லை இல்லையா? இவர்கள் யாருடைய பொருள்களைப் பாழாக்குகிறார்கள் என்கிற எண்ணம் தோன்ற வேண்டாமா? தனிப்பட்ட பகைமைக்கு இப்படி மக்கள் சொத்துக்களையும் அரசு உடைமைகளையும் பாழாக்குவது என்ன நியாயம்? அமைச்சர்கள் என்பவர்கள் அரண்மனைக் கொலு பொம்மைகள் என்றிருந்து விட்டதன் கொடிய விளைவோ 'இது? அமைச்சு கெடுமானால் அரசு கெடுகிறது!

எங்கெங்கும் விவசாயிகள் அழுத கண்ணீரும் தொழுத கையுமாக நிற்கிறார்கள்.

அனைவருக்கும் வலக்கரத்தை உயர்த்தி ஆறுதல் சொன்ன வண்ணம் ஏரி நோக்கிச் செல்கிறார் முதலமைச்சர் சேக்கிழார்.

எங்கும் அவரை வாழ்த்தி எழுப்பும் குரல்கள் எதிரொலித்த வண்ணமிருக்கின்றன.

முடிகொண்டான் பேரேரியை நெருங்கியதும் பல்லக்கிலிருந்து இறங்குகிறார் மாண்புமிகு முதலமைச்சர் சேக்கிழார்.

ஆகா! எவ்வளவு பெரிய ஏரி!.

முடிகொண்டான் ஆற்றினை அமைத்ததோடல்லாமல், அதன் நீர் வீணாகாமல் திருப்பித் தேக்கிய இந்தப் பிரும்மாண்டமான ஏரி, இராஜேந்திர சோழ மாமன்னனின் பிரும்மாண்டமான வீரப்புகழையல்லவா எடுத்தோதுகிறது! இப்பேர்ப்பட்ட ஏரியின் மடைகளையும், கரைகளையும் உடைத்த கொடும்பாவிகள் யாராய் இருப்பர்?

குடந்தை மண்டலாதிபதி அருகில் இருந்து ஓரிரவுப் போதில் ஏரி உடைந்து போனதையும் அதனால் ஏற்பட்ட நட்டங்களையும் சொல்லுகிறார்.

மக்களுள் முக்கியத்துவம் வாய்ந்த பெரிய மனிதர்கள், சுற்றிலும் உள்ள ஊர்களும் வயல்களும் விடுகளும் எப்படியெல்லாம் நாசமாயின என்பது குறித்து விளக்குகிறார்கள்.

மேலே வானில் சூரியன் ஓய்வு கொள்ள ஆயத்தமாகிக் கொண்டிருக்கிறான்.

அப்போது...

கூட்டத்தில் சலசலப்பு...

கூடியிருந்த அனைத்துக் கண்களிலும் கேள்விக்குறிகள்...

சேக்கிழார் அந்தச் சலசலப்பு வரும் திக்கை நோக்கிக் கவனிக்கிறார்...

குழுமியிருந்த மக்கள், விலகி, விலகி வழி விடுகிறார்கள்...

அந்த வழியே வருவது யார்?

கபாலீச்சுரன்...!

இவன் எப்படி இங்கு வந்தான்? ஏன்?

பயங்கர ஆவேசத்துடன், யாரோ ஒருவனைத் தரதரவென்று, இழுத்து வருகிறானே கபாலீச்சுரன்.

பலியாட்டைப் போலச் சண்டித்தனம் செய்து திமிறிக் கொண்டு வருபவன் யார்?

''ஈசா! நீ எப்படி இங்கு வந்தாய்? யாரிவன்?'' என்றார் சேக்கிழார்.

''அமைச்சர் பெருமானே! இத்தனை பெரிய நஷ்டங்களுக்கு உரிய தீயவர்களுள் இவனும் ஒருவன். இவன் பிடிபட்ட கதையைப் பின்னர் விளக்குகிறேன். இவன் அடிபட்டுச் சாகத் துணிகிறானே தவிர, உண்மையைச் சொல்ல மறுக்கிறான்!'' என்று கூறிய கபாலீச்சுரன் இழுத்து வந்தவனை இழுத்துத் தள்ளுகிறான்.

பிடிபட்டவன் தரையில் விழுந்து புரண்டு எழுவதற்குள், அவனைப் பற்றி இழுத்துப் பாதுகாப்பில் நிறுத்த முனைந்தான் மகா சேனாதிபதி நாலூரான்.

மக்களிடையே மேலும் மருட்சி நிறைந்த சலசலப்பு எழுந்தது.

(தொடரும்)

மூடு பலகையைத் திறந்து கொக்கியை மாட்டிய பிறகுதான் எதிர் பங்களாவில் அந்த அழுகுரலைக் கேட்டான் கந்தசாமி. அவனது நடமாடும் இஸ்திரிக் கடை காலை யில் நிற்கும் இடம் அது.

''எங்களையெல்லாம் இப்படி மோசம் பண்ணிப்பிட்டியேடா பாவி!'' என்று இதயம் வெடித்துக் கொண்டு வந்த ஓலம் அது.

அதிர்ச்சியுற்று நிமிர்ந்து பார்த்தான் கந்தசாமி.

போர்ட்டிகோ சுவரில், படிகளில், புல் வெளியில் சாய்ந்து கொண்டும், நின்றும் அமர்ந்தும் ஆட்கள். உள்ளேயிருந்து விசும்பல் களும் கதறல்களும் அலையலையாகப் புறப் பட்டன.

துக்கத்தின் திரி யாரோ ஒருவர் முதலில் கொளுத்தட்டும் என்று காத்திருக்கிறது. அதன் பிறகு அவரவர் பாணியில் எல்லோ ரும் அழத் தொடங்கிவிடுகிறார்கள்.

அந்தப் பங்களாவில் இன்று ஒரு சாவு நேர்ந்திருக்கிறது என்று புரிந்து கொண்டான் கந்தசாமி.

''இன்னிக்கு முழிச்ச மூஞ்சி சரியில்லே'' என்று முனகிக் கொண்டான். தொடர்ந்து திறந்த பலகையை மூடிவிட்டு இடம் பெயர வேண்டியதுதான் என்று தீர்மானித்து மாட்டிய கொக்கியைக் கழற்ற விரல் வைக்கும் போது செத்து விட்டது யார் என்று தெரிந்து கொள்ளும் ஆவல் அவனைப் பிடித்தது.

அந்தப் பங்களா அவனுக்குப் பரிச்சய மானது. ஒரு வருஷமாகக் கஸ்தூரி ரங்கன் சாலையில் அவனது நடமாடும் இஸ்திரிவண்டி யின் காலைப் பொழுது அந்தப் பங்களா எதிரில் விளக்குக் கம்பத்தின் பக்கத்திலுள்ள அசோக மர நிழலில்தான் விடிந்திருக்கிறது.

''இந்த வயசான காலத்திலே எங்களை இந்தக் கோரத்தையெல்லாம் பார்க்க வெச் சுட்டியேடா!'' உள்ளேயிருந்து வீட்டுக் காரப் பெரியம்மாவின் ஓலம்.

செத்தவன் ஆண்தான். அது யார்? இளை ஞன் என்றும் விளங்கிற்று. அது யார்? அந்தப் பங்களாவில் மூன்று இளைஞர்கள் உண்டு. மூவருமே அவன் வாடிக்கைக் காரர்கள். அவர்களில் மாண்டது யார்?

சுரேஷ், தினேஷ், சுபாஷ். இவர்களில் சுபாஷைக் கந்தசாமிக்குப் பிடிக்கும்.

'கடவுளே அவன் செத்திருக்கக் கூடாது! அவன் மட்டும் சாகக் கூடாது!' என்று மனசு அங்கலாய்த்தது.

சுபாஷ் போன வருஷ முதலில் அவனுக்கு பர்த்-டே கேக் வெட்டியதும் ஆளாளுக்குப் பகிர்ந்துவிட்டு வேலைக்காரன் மூலம் கந்த சாமிக்கும் ஒரு துண்டு கொடுத்தனுப்பியிருந்.



# சக்கரம் பூட்டிய வாகனம்

ஐவயவன்

தான். சுபாஷ் ஒரு ஜாலியான பையன்.

தூள் பறக்க எஸ்டி ஓட்டுவான். அதை சர்ரக் என்று கந்தசாமியின் நடமாடும் இஸ்திரிப் பெட்டிக் கடையின் முன் கொண்டு வந்து நிறுத்திவிட்டு, "நீ எங்கே கந்தசாமி என் துணியைத் தேச்சிருக்கப் போறே. ஏதானு கலர் வந்தா மொத மொதல்லே அவங்களுக்குப் போட்டுடுவே' என்று கலாட்டா செய்வான்.

பொழுது போகாத 'மூட்' இருந்தால் காம்பவுண்ட் கேட் மீது சாய்ந்து கொண்டு காலே வேளையில், "உன் கல்யாணத்துக்கு எவ்வளவு பணம் சேர்த்து வெச்சிருக்கே?" என்று வம்புக்கிழுப்பான்.

"போங்க சார்! இந்த வெலவாசியிலே எவன் கல்யாணம் பண்ணிப்பான்? எவன் ஒருத்திய மஞ்சக் கவுரு கட்டி இஸ்த்தாந்து சம்சாரம் பண்ணுவான்?" என்று கந்தசாமி சொல்லிவிட்டால் விட மாட்டான்.

"அப்ப அப்படியே லைட் ட்ராக்கிலேயே வண்டிய ஓட்டிடலாங்கறியா?"

"த பாத்தீங்களா, இதானே வாண்டாங்கிறது. நீங்க பெரிய ஊட்டுப் புள்ளே! ஜல், சாவா காலத்தைக் கழிக்கலாம். கவலேயில்லாத ராஜா... நம்மளேச் சொல்லுங்க..."

"எந்த ராஜாவுக்கும் கவலேயில்லாமே இருக்காது கந்தசாமி. எங்க பாட்டி சொல்லு வாங்க, அவனவன் உயரத்துக்குத் தகுந்த நிழலுன்னு!"

கந்தசாமிக்குத் தெரிந்து பாட்டியின் பேச்சைக் 'கொட்டேஷன்' கொடுக்கிற ஒரே நவீன இளைஞன் சுபாஷ்தான்.

கூடாது. அது சுபாஷாக இருக்கக்கூடாது. இப்படி நினேக்கும்போதே அது சுரேஷாகவோ,தினேஷாகவோ இருந்தால்பரவாயில்லேயா என்று மனசு எதுக்களித்தது. 'வேண்டாம் இந்தப் பங்களாவிலிருக்கும், யாராகவும் இருக்க வேண்டாம்.'

"பத்மநாபா... மாலேக்குச் சொன்னேன்! கடைத்தெரு மூலேலே கோவர்த்தனம் கிட்டே... கட்டிட்டானு பாரு! கட்டிட்டிருந்தால் வாங்கியா!" என்று அந்தச் சாவு வீட்டின் வெளியே நிர்வாகம் செய்கிற ஜபர்தஸ்தோடு ஒருவர் கூறினர்.

பத்மநாபன்என்றுவிளிக்கப்பட்டவேலேக்காரன் சைக்கிள் ஏறித் தலே தெறிக்கிற வேகத்தில் வெளியே வந்தான்.

அவனேக் கேட்டால் தெரியும்!

"யோவ் பப்பு! இங்கே வாய்யா."

"ஒரு அர்ஜெண்டு! அப்புறமா வர்றேன்" என்று அவசரமாகப் பறந்து விட்டான் பத்மநாபன்.

"கொஞ்சம் நில்லு... கொஞ்சம்."

பத்மநாபன் காது எட்டாத தூரத்திற்குப் போய் விட்டான்.

'தெய்வமே அது சுபாஷாக இருந்துவிடக் கூடாது' என்று கந்தசாமியின் மனம் அடித்துக் கொண்டது. கொஞ்ச நேரம் நின்றால் சுபாஷின் தலே வெளியே தெரிந்து, வழக்கம்போல ஒரு 'தம்' அடிக்க வெளியே சுபாஷ் வரலாம் என்றொரு நப்பாசை பிறந்தது.

நேற்று காலே சுபாஷ் இஸ்திரிக்குத் துணிகளேக் கொடுத்துவிட்டு 'மாட்சஸ் இருக்கா" என்று தன் பங்களாவை ஏறிட்டுப் பார்த்தவாறே கேட்ட கவனம் வந்தது.

கந்தசாமி தீப்பெட்டியை நீட்டினன். அதில் சுரை போன ஒரு வெற்றுக் குச்சி



தான் இருந்தது.

"வெளயாடறியா கந்தசாமி?" என்று கேட்டுவிட்டு சிகரெட்டை இஸ்திரிப் பெட்டி இடுக்கில் தெரிந்த நெருப்புத் தழலில் பற்ற வைத்துக் கொண்டு, அவனுக்கே உரிய ஸ்டை லில் ஒத்து ஊதுவது போல் உள்ளங்கை யில் மறைத்தபடி சிகரெட்டை ஒரு தம் இழுத் தான் சுபாஷ்.

நேற்றைய சலவைக்குக் கொண்டு வந்த துணிகளில் ஒரு சின்ன கர்சீப்பும் இருந்தது. சுபாஷின் துணிகள், அவன் போன வாரம் தைத்தது முதற்கொண்டு எல்லாம் கந்த சாமிக்குத் தெரியும். அந்தக் கர்சீப் அவனு டையது இல்லை.

அதைப் பிரித்தவுடனே கும்மென்று மல் லிகை செண்டின் மணம் வந்தது. சுற்றிலும் பூவேலை செய்யப்பட்டு ஒரு இனிஷியல் 'எஸ். கே.' என்றிருந்தது.

அந்தக்கர்ச்சீப் கந்தசாமிக்குச்சட்டென்று அது யாருடையது என்று தெரிந்துவிட்டது. அவனது வாகனம் காந்தி நகரில் பல வீதி களில் இரண்டிரண்டு மணிக்கு ஓரிடமாக நகர்ந்து கொண்டேயிருக்கும். நிழல் விழு கின்ற ஒவ்வொரு மூலையிலும் அவன் நிற் பான்.

இது வ. உ. சி. தெருவில் சாக்லேட் பெயிண்ட் அடித்த சுப்ரதா பங்களாவில் வசிக்கும் இளம் பெண்ணுடையது. இதற்கு அவனே இஸ்திரி போட்டிருக்கிறான்.

"சார்... இந்தக் கர்ச்சீப் ஒங்களது இல்லே போலிருக்கே.

"கந்தசாமி... நீ என்ன வரவர சி.ஐ.டி. வேலே செய்ய ஆரம்பிச்சுட்டே?"

"ஐயய்ய... ஒங்க துணி எனக்கு மனப் பாடம். இது ஒங்களது இல்லே... அதோட..."

இரண்டாவது தம்மை இழுத்துவிட்டு சுபாஷ் கேட்டான். "அதோட... ஏன் நிறுத் திட்டே... கமான் கண்டின்யூ!"

"இந்தக் கர்ச்சீப் யாரோடதுன்னு எனக் குத் தெரியும்!"

சுபாஷ் விழித்த விழி அசையாமல் கந்த சாமியைப் பார்த்தான்.

"தெரிஞ்சுக்கிட்டே 'இல்லே'" என்று கேட்டுவிட்டுக் கண்களைச் சிமிட்டினான். அப்புறம் தொடர்ந்தான்:

"தெரிஞ்சுக்கிட்டதையெல்லாம் காட்டிக் கப் படாது கந்தசாமி."

"நான் ஏன் சார் காட்டிக்கறேன்! ஆனால் ஒரு விஷயம்."

"என்ன?"

"ஒங்க செலக்ஷன் சூப்பர் ஸார்.

பதிலுக்கு சுபாஷ் ஒரு நமுட்டுச் சிரிப்பு சிரித்தான்.

அதற்குமேல் வளர்ப்பது தனக்கு அந்தஸ் தல்ல என்று கந்தசாமிக்குத் தெரியும். இப் படி அவரவர் எல்லேயில் நின்று கொண்டே பாராட்டிய உறவு ஆதலால் அவர்களுக்குள் ஒரு பரஸ்பர மரியாதை நேச பூர்வமாய் நீடித்தது.

ஆண்டவனே, அது சுபாஷாக இருக்கக் கூடாது!" என்று வேண்டிக் கொண்டிருக்கும் போதே சுரேஷ் வெளியே வந்தான். பின்னால் தினேஷ்.

இருவரும் கந்தசாமியைப் பார்த்தனர். சுரேஷிடமிருந்து ஒரு விசும்பல் வெடித்தது. தினேஷ் அவன் தோளைப் பிடித்துக் கொண்டு அவனை அடக்கச் செய்த முயற்சியில் தன்னைச் சிறுகச் சிறுக இழந்து கொண்டிருந் தான். பளீரென்று ஆதாரத் தானம் வெடித் தது போல் அந்த உண்மை அவனுள் வெளி வாங்கிற்று.

அது சுபாஷ்தான். எந்த ஆண்டவனுக்கும் இஸ்திரிப்பெட்டி கந்தசாமியின் வேண்டு தல்களை ஏற்கப் பிரியமில்லை. அது சுபாஷே தான்.

"எப்படிங்க சார்?" என்று அவன் தினே ஷைக் கேட்டான்.

"தினேஷ்... இங்கே ரெண்டு பேரும் கொஞ்சம் உள்ளார வாங்க!" என்று சாவின் நடுவே சிம்மாசனம் போட்டுக் கொண்ட கார்ியஸ்தர் அவர்களை அதட்டினார்.

அவ்வேளையில் ஒரு சிம்மாசனத்திற்கு எதிர்க் கேள்விகள் இருப்பதில்லை. இருவரும் உள்ளே போய்விட்டனர். அவர் களைக் கூப்பிடலாம் என்று வாய் வந்தது. அடக்கிக் கொண்டான்.

சுபாஷின் சலவைத் துணிகளை நேற்று இரவு மஞ்சுநாத குப்பத்தில் தன் குடிசைக் கெதிரே அவன் இஸ்திரி போட்டுவிட்டான்.

இப்போது அதை யாரிடம் கொடுப்பது? சுபாஷ் நேற்று துணிகளை இஸ்திரிக்குக் கொடுத்தது கூட யாருக்கும் தெரியாது. இப் போது கொடுக்கிற சமயமல்ல. கொடுத் தாலும் கூலி கேட்கிற தருணமல்ல.

யோவ் இஸ்திரி!" என்று கணகண வென்று பெல் அடித்துக் கொண்டே பின்னா லிருந்து கூப்பிட்டான் மாலேக்குப் போயி ருந்த பத்மநாபன்.



கும்பகோணம் ராஜா வேத காவ்ய பாடசாலை 444 வது ஆண்டு விழா 29.5.86 சிறப்பாய் நடந்தது. மத்திய அரசின் கல்வி இலாகா துணை செயலாளரும், நிதி ஆலோசகருமான Sri L.S. நாராயணன் ICAS தலைமை வகித்து இந்த வருஷம் அத்யயனத்தை பூர்த்தி செய்த மாணவர்களுக்கு "வேத ப்ரவீண" என்ற சான்றிதழையும், ஸாம வேதம் 1. V. நடராஜன், 2. K. ராஜசேகரன், 3. S. ஸுப்ரமண்யம் 4. R. கிருஷ்ணமூர்த்தி, 5. வெங்கட்ராமன் ஆகியோர்களுக்கு முறையே ரூ 5000/—, ரூ 3000/— ரூ 3000/—, ரூ 3000/—, ரூ 3000/—ம், யஜுர் வேதம் 1. B. ராமமூர்த்தி, 2. K.N.R. ஸத்ய நாராயணன். இருவருக்கும் தலா ரூ 4000/—ம் ரொக்கப் பரிசையும் அளித்து ஆசிர்வதித்தார். பாடசாலை நிர்வாகக் குழுத் தலைவர் நித்யாக்னி ஹோத்ரி, ஸோமயாஜி, த்ரிவேதி, வேதஸம்ரக்ஷக ரத்னம் Dr. V.R.L. சர்மா வரவேற்புரை நிகழ்த்துகிறார்.

ஸ்ரீ புவனேஸ்வரி துணை

## அருள்மிகு திருபுவனேஸ்வரி திருக்கோவில்

பாரதிதாசன் காலனி,
K.K. நகர், சென்னை—600 078.

பேரன்புமிக்க பெரியோர்களே!

எல்லாம் வல்ல இறைவனின் கிருபையை முன்னிட்டும், ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள், சிருங்கேரி மடம் பரமாச்சார்யாள், பூஜ்ய ஸ்ரீ சாந்தானந்த அவதூத சுவாமிகள் போன்ற பெரியவர்களின் பரிபூர்ண அனுகிரஹத்தை முன்னிட்டும் ஸ்வஸ்திஸ்ரீ அக்ஷய ௵ ஆனி மாதம் 30ம் தேதி (14.7.86) திங்கள்கிழமை சப்தமியும், ஹஸ்த நக்ஷத்திரமும் கூடிய சுப தினத்தில் சென்னை K. K. நகர் பாரதிதாசன் காலனியில் குடி கொண்டுள்ள ஸ்ரீ புவனேஸ்வரி அம்மனுக்கு மஹா கும்பாபிஷேகம் செய்ய ஏற்பாடாகி உள்ளது.

இதுவரையில் திருக்கோவில் கட்டுவதற்கு ரூ 1,25,000/— செலவழிக்கப்பட்டு கர்ப்பகிரஹம், அர்த்த மண்டபம் கூடிய 42 அடி உயரமுள்ள கோபுரமும் பூர்த்தியாகிவிட்டது. மஹா மண்டபம், கோவில் மதில் சுவர், கோபுர மஹா மண்டப பொம்மைகள் வண்ணப் பூச்சுடன் பூர்த்தியாக வேண்டும். எனவே இடி வேலைகள் பூரணமாக முடியவும் கும்பாபிஷேகம் சிறப்புற நடைபெற ரூ 1,50,000 வரை தேவைப்படுகிறது.

பெரும் மனம் கொண்ட அன்பர்கள் தாராளமாக பொருள் உதவி செய்து தீர்மானிக்கப்பட்ட நல்ல நாளில் மஹா கும்பாபிஷேகம் நடைபெற உதவும்படி கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைக்கு 80 G விதியின்படி வருமான வரிவிலக்கு அளிக்கப்பட்டுள்ளது. மணியார்டர், காசோலை அனுப்பும் அன்பர்கள் கீழ்கண்ட விலாசத்திற்கு அனுப்பவும்.

பொருளாளர்,
திரு அருள்நெறி நற்பணி மன்றம்,
I. 123 பாரதிதாசன் காலனி,
K. K. நகர், சென்னை—600 078.

தனது வாகனத்தைப் பங்களா எதிரிலிருந்து நகர்த்திக் கொண்டே பத்மநாபனை நெருங்கினான் கந்தசாமி.

''உன்கிட்டே சுபாஷ் ஐயா நேத்து எதுனாச்சியும் சொல்லிச்சா?'' என்று கேட்டான் பத்மநாபன்.

''ஒண்ணுமில்லியே! அவுரா செத்துட்டாரு?''

''ஆமாம்!''

''அடக் கடவுளே, எப்பிடிய்யா? நேத்துக் கூட நல்லாத்தானே இருந்தாரு? விடியக் காலம்பற நான் வண்டியக் கொண்டாந்து நிறுத்தறேன். வியர்க்க விறுவிறுக்கப் பனியனும் ஷர்ட்டும் போட்டுக்கிட்டு ரன்னிங் ரேஸ் போயிட்டு ஓடியாந்தாரு!''

''ப்சப்...'' என்று முகம் இருளச் சப்புக் கொட்டினான் பத்மநாபன்.

''எப்படிச் செத்துட்டாரு?''

''சுயிஸைட்' தற்கொலை பண்ணிக்கிட்டாரு. கட்டிலுக்குப் பக்கத்திலே தூக்க மாத்திரைப் புட்டி கெடந்துச்சு!''

கந்தசாமி இந்த வாழ்க்கையையே நம்ப முடியாதது போல சூன்யத்தில் ஒரு விநாடி இடம் பெயர்ந்தான்.

''ஏன்... ஏன்... பப்பு... ஒனக்குத் தெரியுமா?''

''ஏதோ காதல் தோல்வி! அவ்வளவு தான் நமக்குத் தெரியும். வேற எதுனா உங்கிட்டே சொன்னாரான்னு நான் கேட்டேன்!''

''நமக்கு இன்னாபா தெரியும். பெரிய வீட்டுப் பிள்ளைங்க! ஏதோ நல்ல மாதிரியா சிரிச்சிக்கிட்டே நாலு வார்த்தை பேசுவாரு.... போவற வயசா இது!'' என்று ஆழ்ந்த வேதனையுடன் பெருமூச்செறிந்தான் கந்தசாமி.

பத்மநாபன் சிறு 'கல்வெட்'டின்மீது ஊன்றியிருந்த காலை எடுத்துக் கொண்டு சைக்கிளை மிதித்தான்.

காதல் தோல்வி! அதுக்காகத் தூக்க மாத்திரை சாப்பிட்டு மாண்டு போவது என்ன முட்டாள்தனம் என்று தோன்றியது. எந்தக் காதலி எங்கே தோற்க வைத்திருப்பாள்?

பளிச்சென்று அந்தக் கர்ச்சீப் கவனம் வந்தது. வ. உ. சி. தெரு. 'சுப்ரதா' பங்களா. அவளாகத்தான் இருக்கும். அவளுக்கு இந்தச் செய்தி போயிருக்குமா? கந்தசாமி மனம் சாம்பி அந்தப் பங்களாவை விட்டு வண்டியை நகர்த்தினான்.

**மா**லை நாலு மணிக்குக் கந்தசாமியின் நடமாடும் இஸ்திரிக் கடை 'சுப்ரதா'வின் முன் நின்றது. அந்தச் சாக்லேட் வண்ண வீடு ஒரு பாவமும் அறியாத குளுமையுடன் போகன் வில்லா பூத்துக் குலுங்கப் புன்னகை செய்வது போல் காட்சியளித்தது.

ஐந்து நிமிஷத்தில் அந்த எஸ்.கே. வெளியே வந்தாள். கையில் இஸ்திரிக்காகச் சில துணிகள். கந்தசாமியை நோக்கி அவள் வரவும் மணியடித்தவாறு சைக்கிள் மிதித்துக் கொண்டே மாக்ஸியில் எதிர்த் திசையிலிருந்து ஒருத்தி வந்தாள்.

''ஹாய் எஸ். கே!'' என்றாள் வந்தவள்.

''ஹாய்.''

''எங்கே யார்? ட்ரிம்மா டிரஸ் பண்ணிட்டிருக்கே?''

''ஈவினிங் ஷோவுக்குப் போகணும்! ரிஸர்வ் பண்ணலாம்னு பார்த்தா போன் அவுட் ஆஃப் ஆர்டர். டிக்கெட் கெடைக்குமோ இல்லியோ. நேரா போயிட்டு வரலாம்னு காரை எதிர்பார்த்துட்டுக் காத்துட்டிருக்கேன்!''

வந்தவள் கந்தசாமியைத் திரும்பிப் பார்த்தாள். அவன் ஒரு யந்திரம் போல் இஸ்திரியில் மூழ்கியிருந்தான்.

''ஏன், டீ. வி. யிலே இன்னிக்கு அம்பிகாபதி ஆச்சே!''

''ஐ டோன்ட் லைக் இட்! அதனாலேதான் கௌம்பிட்டேன். இன்னிக்கு என்னமாவது லேட்டா ஜாலியலா ஒரு தியேட்டர்லே உட்கார்ந்து சினிமா பார்க்கணும்னு ஒரு மூட்.''

மறுபடியும் சைக்கிள்காரி... கந்தசாமியைப் பார்த்தாள். அவன் ஒரு செவிட்டுமை மாதிரி இஸ்திரிப் பெட்டியை இழுத்துக் கொண்டிருந்தான்.

''நான் என்னமோ கேள்விப்பட்டேனே?''

''சுபாஷ் பற்றித்தானே?''

''ஆமாம்!''

''முட்டாள்! பழியை என் பேர்லே போடறதுக்காக ஸ்லீப்பிங் பில்ஸ் சாப்பிட்டுட்டான். நீ சொல்லு. சின்னச் சின்ன விஷயங்களுக்காகல்லாம் உயிரை வேஸ்ட் பண்ணிக்கறது விவேகமா?''

''யூ ஆர் கரெக்ட்.''

''காலையிலே விஷயத்தைக் கேட்டதிலேருந்து எனக்கு மூட் அவுட். ஜஸ்ட் ஒரு சேஞ்சுக்காக இப்ப சினிமாவுக்குப் போயிட்டிருக்கேன்.''

''தட்ஸ் குட்.... ஸீ யூ யார்!''

**இ**து நடந்து ஒரு வாரம் கழித்துத் துக்கத்தின் அலைகள் சுபாஷ் வீட்டில் சற்று அடங்கிய பின்பு கந்தசாமி இஸ்திரி போட்டு வைத்திருந்த சுபாஷின் துணிகளை அவர்கள் வீட்டில் சேர்ப்பித்தான். மீண்டும் அடங்கிய அந்த அலை சுபாஷின் துணிகளைப் பார்த்ததும் மேலெழுந்தது. அவர்கள் கூலி கொடுக்க வந்தார்கள். கந்தசாமி வாங்க மறுத்துவிட்டான். ஒரு வார்த்தை பேசாது அவன் கண்களிலிருந்து வழிந்தோடிய கண்ணீர் அவர்கள் நெஞ்சைத் தொட்டது.

சுபாஷின் துணிகளில் அந்தக் கர்சீப்பை மட்டும் அவன் அவர்கள் வீட்டில் சேர்ப்பிக்கவில்லை. சேர்ப்பித்திருந்தாலும் அது அவனுடையதல்ல என்று திருப்பிக் கொடுத்திருப்பார்கள். அந்தக் கர்ச்சீப் விலை மதிப்பற்றது போல் அவனுக்குத் தோன்றியது. அதற்காக சுபாஷ் கொடுத்த விலை ஊதாரித்தனமானது என்று யார் பேசினாலும் கந்தசாமிக்கு அந்த அவிவேகத்தின் பின்புலத்தில் ஓர் அனுதை இதயம் வெளிப்பட்டது. அவன் மாதிரி ஓர் இஸ்திரிப் பெட்டிக்காரனையும் நேசித்த இதயம்.

கந்தசாமி சுபாஷின் ஞாபகத்திற்காக அந்தக் கர்ச்சீப்பை நிறுத்திக் கொண்டான்!



# NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (REGD)

**1-57, North Mada Street, P.O. Tirumala Hills.**

**Pin 517504 Via Tirupathi. Phone: 290**

ஸ்ரீ காஞ்சி சங்கராச்சாரியார் ஸ்வாமிகளின் அனுக்ரஹத்துடன் கலியுக கண் கண்ட தெய்வமான ஸ்ரீ வெங்கடாசலபதி திருக் கோயில் கொண்டிருக்கும் இந்த திருமலை புண்ய க்ஷேத்திரத்திலிருந்து கண்களை இழந்தவர்களுக்கு இந்த நவஜீவன் சேவா கேந்திரம் பல விதங்களிலும் உதவி வருவது வாசகர்கள் அறிந்ததே.

கடந்த 26.5.86 அன்று திருமலை ஸன்னிதானம் அருகே தமிழ்நாடு மற்றும பாரதத்தின் பல பாகங்களிலிருந்தும் வந்திருந்த பார்வையற்றவர்களை ''கௌரவிக்கும் விழா'' சிறப்பாக நடந்தது. இந்த விழாவிற்கு தலைமை வகித்த சென்னை அஷ்டலக்ஷ்மி கோயில் ஸ்தாபகரான ஸ்ரீமுக்கூர் ஸ்ரீநிவாச வரதாச்சார்யர் ஸ்வாமி அவர்கள் பேசுகையில் ''ஸர் வேந்த்ரியாணும் நயனம் ப்ரதானம்'' என்கிறபடி விழிகளை இழந்தவர்களுக்கு மறுவாழ்வு கொடுப்பதும் கண் தானத்தின் மூலமாக மீண்டும் ஒளியை ஏற்படுத்த முயற்சிப்பதும் புண்ணிய கார்யம் என்று நவஜீவன் சேவா கேந்திரத்தின் சேவையை பெரிதும் பாராட்டினார். பார்வையை இழந்தும் தன்னுடைய விடாமுயற்சியின் காரணமாகவும் பரத நாட்டியத்தில் சிறப்பு பயிற்சி பெற்றுள்ள பெங்களூர் ரமண மஹரிஷி விழியற்றோர் பள்ளியைச் சேர்ந்த குமாரி அனிதாவின் பரத நாட்டிய நிகழ்ச்சி வந்திருந்தோர்களை மிகவும் நெகிழச் செய்தது. விழாவின் முடிவில் குஜராத்தைச் சேர்ந்த விழியற்ற கலைஞர்களால் வேத பாராயணமும் கதா காலட்சேபமும் சிறப்பு நிகழ்ச்சியாக அமைந்தது. இத்தருணத்தில் நவஜீவன் சேவா கேந்திரத்தின் ஸ்தாபனத் தலைவரான ஸ்ரீ கே. ஸ்ரீதராசார்ய அவர்கள் விழியற்ற கலைஞர் ஒவ்வொருவருக்கும் தலா ரூபாய் ஆயிரம் (1000/—) வீதம் அன்பளிப்பும் ஸன்மான வஸ்திரமும் அளித்து கௌரவித்தார். எதிர் காலத்தில் விழியற்றோர்களுடன் ஏனைய உடல் ஊனமுற்றோர்களுக்கும், அனாதைப் பெண்களுக்கும் நவஜீவன் சேவா கேந்திரம் தனது சேவையை விஸ்தரிக்கத் திட்டம் வகுத்துள்ளதாகவும் தெரிவித்தார். நேரில் வந்திருந்தும் வாழ்த்து செய்தி மூலமும் விழியற்ற கலைஞர்களுக்கு ஆசி வழங்கிய அன்புள்ளம் படைத்தவர்களுக்கு கே. ஸ்ரீநிவாசன், செகரட்ரி அவர்கள் நன்றியும் வணக்கமும் தெரிவித்துக் கொண்டார்.

பணிவுடன் கூடிய ஒரு வேண்டுகோள்

விழிகளை இழந்தவர்களுக்கு தற்போது இந்த சேவா கேந்திரம் அளித்து வரும் தொண்டுகளை எதிர்காலத்திலும் விசேஷமாக விஸ்தரிக்கும் பொருட்டு அன்பார்ந்த வாசகர்களின் உதவியை பெரிதும் வேண்டுகிறோம். கலியுக கண் கண்ட தெய்வமான, வேண்டுவோருக்கு வேண்டியதை அளிக்கும் ஸ்ரீ ஏழுமலையான் திருக்கோயில் கொண்டிருக்கும் இந்த புண்ய க்ஷேத்திரத்தில் எந்த ஒரு தொண்டு செய்தாலும் அதற்கு ஆயிரம் மடங்கு அதிகம் புண்ய பலன்கள் கிடைப்பதாக புராணங்க்ள் கூறுகின்றன. விழிகளை இழந்து வாழ வழி தெரியாமல் பரிதவித்து வரும் பல லட்சம் மக்களில் ஒரு சிலருக்காவது நித்தியம் அன்னதானம் வழங்கி சங்கீதமும் கைத்தொழிலும் கற்றுக் கொடுத்து புனர் வாழ்வு அளிக்க முயற்சித்து வருகிறோம்.

இந்தப் புனிதத் தொண்டின் பொருட்டு 501/— ரூ அனுப்பும் கருணை உள்ளம் படைத்தவர்களின் சார்பில் ஒரு வருஷம் பிரதி நித்தியமும் உங்கள் பெயர், கோத்திரம் ராசியில் ஸ்ரீநிவாசப் பெருமாளுக்கு அர்ச்சனை பூஜை ஏற்பாடு செய்கிறோம். மேலும் நீங்கள் குறிப்பிடும் ஒரு நன்னாளில் (உங்கள் திருமண நாள், குழந்தைகளின் பிறந்தநாள் போன்றவை) உங்கள் சார்பாக ஸ்ரீ வெங்கடாசலபதிக்கு விசேஷ பிரார்த்தனை செய்வித்து விழியற்றவர்களுக்கு அன்னதானமும் செய்வித்து ஸ்ரீ வெங்கடாசலபதியின் விசேஷ மஹா பிரசாதம் பதிவும் தபாலில் உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம். தவிரவும் நீங்கள் குடும்பத்துடன் திருமலைக்கு யாத்திரை வரும்போது தேவையான உதவிகளை அளிப்பதுடன் பிரதி வருஷம் ஜனவரி புத்தாண்டு தினத்தன்று உங்களுக்காக விசேஷ பிரார்த்தனை செய்வித்து மஹா பிரசாதமும் அனுப்பி வைக்கிறோம். மேலும் ரூ 51/— அனுப்பும் அன்பர்களின் சார்பாகவும் நீங்கள் குறிப்பிட்டு அனுப்பும் தினத்தன்று உங்கள் சார்பாக விசேஷ பிரார்த்தனை செய்வித்து நீங்கள் அனுப்பும் தொகையிலிருந்து ஒரு பாகம் ஸ்ரீ வாரி ஹுண்டியில் ஸமர்ப்பித்து விழியற்றவர்களுக்கு இனிப்புகள் வழங்கி மஹா பிரசாதமும் ஒருமுறை அனுப்பி வைக்கிறோம்.

500 ரூபாய்க்கு மேல் டொனேஷன் வழங்கும் அன்பர்களுக்கு வருமான வரிச் சலுகை (Income Tax exempt) அளிக்கப்படும். டொனேஷன்களை நவஜீவன் ப்ளைண்ட் ரிலீப் சென்டர், திருமலை என்கிற பெயருக்கு க்ராஸ்ட் செக்/ட்ராப்ட் அல்லது மணி ஆர்டர் மூலமாக அனுப்ப வேண்டுகிறோம்.

**7**

(டைனிங் ஹாலில் ஆனந்த் மோவாயைக் கையில் தாங்கி அமர்ந்திருக்க, முத்து, ராகவாச்சாரி, சாம்பசிவம் எல்லோரும் மேலே பார்த்துக் கொண்டு உட்கார்ந் திருக்கிறார்கள்.)

ராகவா: சுசீலாவுக்கு நேத்து மயக்கம்ன தும் ரகுவீர் ஓடிவந்து அவளைத் தாங்கிக்கிண் டானே, அப்போ அவன் அப்பா மூஞ்சி போன போக்கைப் பாத்தியோ பாண்டி?

பாண்டி: முகத்தோட சேர்ந்து, அவரே போன போக்கு தெரியாதா உங்களுக்கு?

ஆனந்த்: எங்கே போயிட்டார்? ஊருக்கே திரும்பிப் போயிட்டாரா?

பாண்டி: சரியாப் போச்சு. நீ கவனிக் கல்லே? சுசீலாவைப் பிடிச்சுட்டு உலுக்கி, குலுக்கி ரகுவீர் மயக்கம் தெளிய வைக்க ட்ரை பண்றதைப் பார்த்தாரோ இல்லையோ, எடுத்தார் ஓட்டம் ஸ்டேஷனுக்கு.

ராகவா: பெரியவர் நேரே ஊர் போய்ச் சேர்ந்துட்டார்னு கேள்வி!

பாண்டி (சலிப்புடன்): இனிமே இந்த நிர்மலாவை நிப்பாட்டிட வேண்டியதுதான் சார். பாருங்களேன் ஒரு மணி லஞ்சுக்கு ஒண்ணே கால் ஆகியும் ஆளைக் காணல்லே!

ஆனந்த்: ஆமா, நிர்மலாவை நிறுத்திப் புட்டு பி. டி. உஷா, ஷைனி ஆப்ரஹாம் யாரானும் சாப்பாட்டை ஓட்டமா ஓடி எடுத் துக்கிட்டு வருவாங்களான்னு ஐயா ஐடியா பண்றாப்பல இருக்கு!

ராகவா: (குரலைத் தாழ்த்தி) மைதிலி வரல் லியே இன்னும்....? இப்ப எனக்கு அந்த மொராக்கோ கோச் சொன்னதுதான் ஞாப கம் வரது. பி.டி. உஷா மட்டும் அவளோட



# லஞ்ச் டைம்

'அப்பர் பாடி'யை டெவலப் பண்ணின் டிருந்தா இன்னும் ஒரு செகண்ட் முன்னா லேயே வின்னிங் டேப்பை டச் பண்ணி ஜெயிச்சிருப்பான்னான்....

மைதிலி (வந்து கொண்டே): நான் எல்லாம் கேட்டுண்டேதான் வரேன்... பி.டி. உஷாவாலே ஓட முடியும். அவ ஒல்லி....

ராகவா: நோ.... நோ.... மைதிலி, அது வந்து.... வந்து.... நிர்மலா ரொம்ப நேரமா வரலே இல்லியா?

நிர்மலா (கூடையை இறக்கி வைத்து விட்டு) நான் வரல்லேன்னு யார் சொன்னது? எப்படி நாக்கு மேலே பல்லைப் போட்டு....

ராகவா: பல்லு மேலே கல்லைப் போட்டுடு வேன்கிறியா? நிர்மலா! போகட்டும், ஏன் இன்னிக்கு லேட்டு? உன் சிங்கப்பூர் மச்சான் வந்துட்டானா? இல்லே நீயும் அந்த ஆப்ரிக்கா ஸ்போர்ட் எய்டுக்கு ஓடறவங்க கூட ஓடிப் போயிட்டியா? வழியிலே எத்தனை கூல் ட்ரிங்க் குடிச்சே?

நிர்மலா: ஏன் சார் ஆப்ரிக்காவிலே பஞ் சம்னு ஓடறாங்க, பட்டினின்னு ஓடறாங்க. அதை விழா மாதிரி கொண்டாடி, வழி நெடுகப் படம் புடிச்சு, பாட்டுப் பாடி, பணம் சேர்த்துக் குடுக்கறாங்க. நம்ப நாட்டி லேயே எத்தனை கோடிப் பேர் பட்டினி, எத் தினி ஊர்லே பஞ்சம் — அதுக்கெல்லாம் ஒண்ணும் கிடையாதா?

முத்து: உன்னை இல்லே ராஜ்ய சபாவிலே போட்டிருக்கணும் நிர்மலா! என்னமாய் பேசறே நீ! அரசியல்வாதி கணக்கா!

ராகவா: பழசை விடுங்கோ.... நிர்மலா!




உன் சிங்கப்பூர் முச்சான் வந்து வாச்சு தந்தான்னியே, எங்கே ஆளைக் காணோம்? தாலிக்குப் பதிலா வாச்சைக் கட்டினால் எப்படி?

நிர்மலா (வெட்கத்துடன்): நீங்களும் நம்பிட்டீங்க போல!

ராகவா: அப்போ? சும்மா ரீல் விட்டியா என்ன? வாச்சு எங்கிருந்து?

நிர்மலா (இடுக்கிட்டுப் போன மாடசாமியைக் காட்டி): இவரு கொஞ்சம் ஜூடாகட்டும்னுதான் அப்படிச் சொன்னேன். இந்த ஆளுக்கு என்னிக்கு உறைச்சு என்னிக்குப் பரிசம் போட்டு....

மாட: அப்படியா சங்கதி.... கெவுனிச்சுக்கறேன் உன்னே!

ராகவா (கிண்டலாக): எல்லாம் கல்யாணத்துக்கு அப்புறமா நல்லா கவனிச்சுக்கோ மாடசாமி. இப்போ, பாண்டியோட டிபன் கரியரை மாத்தாம குடு.

முத்து:- சார்! நல்லா கதை விட்டீங்க நேத்து, ஒரு ஏர்கண்டிஷனரைக் காணோம்னு!

ராகவா: பின்னே! எம்.டி. ரூம்லே சத்தியமா ஒண்ணு காணோம்பா!

முத்து: அது ஓடலேன்னு அன்னிக்குக் கம்ப்ளெயின்டு கொடுத்தமில்லே. சர்வீஸ் காரங்க வந்து பார்த்திருக்காங்க. கழட்டி நாலு பேரா எடுத்துட்டுப் போயிருக்காங்க, லஞ்ச் அவர்லே. சர்வீஸ் ஸ்லிப் என் டேபிள்லெ இருக்கு சார்!

ராகவா: அப்பாடா!

பாண்டி: நல்லா வயத்தைக் கலக்கிட்டீங்க சார். ஒண்ணுமில்லாத விஷயத்துக்கு!

சாம்ப: ஒண்ணுமில்லாதத்துக்குத்தான் ஓகோன்னு பண்ணிடுவாரு, இந்த ஜி. எம்.

முத்து: அந்த விஷயத்துலே நம்ம ஜி. எம். கேரளா வி. எம்.! ஏதோ கொஞ்ச நஞ்சம் ஒழுங்கா இருந்தா, தேன் கூட்டைக் கலைக்கற மாதிரி மந்திரி சபையை உலுக்க வேண்டியது. அப்புறம் டெல்லி எங்கே குருவாயூர் எங்கேன்னு ஓட வேண்டியது.

பாண்டி: இப்போ கருணாகரன் மினிஸ்டிரிலே யார் யார் இருக்காங்கன்னு அன்னன்னிக்கு ஒரு பட்டியல் கொடுத்தார்னு குழப்பமே இல்லே. இப்போ ஒண்ணுமே புரியல்லே.

முத்து: கூடவே யார் யார் மேலே எந்த எந்த கமிஷன் விசாரணை பண்றதுன்னும்

ஒரு லிஸ்டு குடுத்துடணும். ஒரே கன்ஃப்யூஷன். தலையைப் பிச்சுக்கறுப்பல இருக்கு.

சாம்ப: எனக்கு இப்ப அதைவிடக் குழப்பம், ரகுவீர் — சுசீலா கல்யாணம் உண்டா இல்லையா? ரகுவீரோட அப்பா என்ன சொல்லிட்டு ஓடிப் போய் ரயில்லே உட்கார்ந்தார்?

பாண்டி: மாயவரத்துக்கு ஒரு டிக்கெட்டுன்னு சொல்லி வாங்கிட்டுப் போய் ரயில்லே உட்கார்ந்தார்.

ராகவா: நான் நிச்சயம் பண்ணியிருக்கிற பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கோ, நல்ல பணக்கார இடம்னாரும். ரகுவீர் சம்மதிக்கலையாம். அதைவிட எனக்கு இருக்கிற ஒரே கழுத்துலே ஒரே வெட்டா வெட்டிடுங்கோன்னாரும். அப்பாவுக்கும் பையனுக்கும் இன்னும் சமரசம் ஏற்படலே.

பாண்டி: ராஜீவ் — திரிபாதி லடாய் மாதிரி பக்கம் பக்கமாக் கடுதாசு எழுதாமல் இருந்தாச் சரி.

முத்து: அது பரவால்லியே! ரகு, சுசீலாவைத்தான் கட்டிப்பேன்னு உண்ணாவிரதம் கிண்ணாவிரதம் இருந்துடப் போறான். ஷபனா ஆஷ்மிக்காவது தூது போக ஒரு சசிகபூர் இருந்தார். நாலு நாள்லே முடிஞ்சுது.

ராகவா: ரகுவீர் சார்பிலே நீ உண்ணாவிரதம் இருக்கலாம் மைதிலி. உடம்பும் கொஞ்சம் இளைக்கும்....

(மைதிலி அவரை முறைக்க ரகுவீரும் சுசீலாவும் லஞ்ச் ரூமுக்குள் வருகிறார்கள்.)

சாம்ப: வாங்க. உங்களைப் பத்தித்தான் பேசிக்கிட்டிருக்கோம்.

ரகுவீர்: கேட்டுட்டுத்தான் வரேன். உண்ணாவிரதத்துக்கெல்லாம் மசியற கேஸ் இல்லே எங்க அப்பா. வேறு ஏதாவது வழிதான் கண்டு பிடிக்கணும், அவரைச் சம்மதிக்க வைக்க.

ராகவா: ஏன் சுசிலா, உங்க அண்ணா இருக்கானே, அவனண்டே சொல்லி ரகுவீரோட அப்பாவைப் பார்த்துப் பேசச் சொல்றது?

சுசிலா: சரியாப் போச்சு சார். கசாப்புக் கடைக்காரன்கிட்டே போய் ஆட்டைப் பார்த்துக்கோ பத்திரமான்னு சொல்ற மாதிரி இருக்கு! எங்க அண்ணாவாவது இதுக்குச் சம்மதிக்கறதாவது! அவனுக்கு என்னோட ஆயிரத்து அறுநூறு ரூபாய் சம்பளம் மாசா மாசம் வரது போயிடுமேன்னு ஏற்கெனவே கவலை.

முத்து: அப்போ அண்ணியை அப்ரோச் பண்றது?

சுசிலா: வேறே வினையே வேண்டாம்.

ரகுவீர்: அன்னிக்கு எம்.டி. என்னைக் கூப்பிட்டுப் பேசிண்டிருந்தார் இல்லையா, யாரோ என் மேல சொன்ன குற்றச்சாட்டுக்களை விசாரிக்கிற மாதிரி? அப்போ ஒரு சஜஷன் சொன்னார்.



# ஒரு பூங்கா புலம்புகிறது

நான்தான் நாகர்கோவில் மையத்தில் அமைந்திருக்கும் பூங்கா. சர். ஸி. பி. ராமசாமியின் அறுபதாண்டு பூர்த்தி விழா நினைவாக என்னை நிறுவினார்கள். ஒரு காலத்தில் நான் மிகவும் நன்றாக இருந்தேன். இப்போது ம்ஹூம்!

பல செடி கொடி, மரங்களுக்கு நடுவில் என். எஸ். கிருஷ்ணனும், டி. ஏ. மதுரமும் இணைந்து நிறுவிய காந்திஜி நினைவு ஸ்தூபி இருக்கிறது. இந்த நினைவு ஸ்தூபிக்குக் கீழேயும், மரங்களுக்குக் கீழேயும் உள்ள நிழல்களை சோம்பேறிகள் தங்கள் சந்தை மடமாக உபயோகிக்கிறார்கள்.

என் எல்லையிலேயே நகராட்சியின் நூலகம் கூட அமைந்திருக்கிறது என்று பெருமையாகச் சொல்லிக் கொள்ளலாம்தான். ஆனால் அந்த நூல் நிலையத்தில் சரியான விளக்குகள் கூட இல்லாததால் மக்கள் சிரமப்படுகிறார்கள்.

எனது எல்லையில் நிறைய விளக்குக் கம்பங்களை நட்டு வைத்திருக்கிறார்கள். ஆனால் அந்தக் கம்பங்களில் விளக்குதான் எரிவதில்லை. எனவே பெரும்பாலும் நான் இருட்டு சோகத்திலேயே என்னை இழந்து நிற்கிறேன்.

நான் இருளடைந்து இருப்பது சில ஆசாமிகளுக்கு மிக வசதியாய் இருக்கிறது. ஒரு சிலர் கஞ்சா வியாபாரம் பண்ணுகின்றனர். வேறு சிலர் ஜாலியாக இருப்பதற்காக சினிமா ஷோக்கள் முடிந்தவுடன் இங்கே வந்துவிடுகின்றனர். ஜாலி முடிந்தவுடன் பெண்கள் ஒரு பக்கம் காசை வாங்கி மார்பில் செருகிக் கொண்டு நடை போடுகின்றனர். ஆண்கள் வேறு பக்கம் நடக்கின்றனர்..

சில சமயங்களில் இந்த 'காதலர்களை'ப் பயமுறுத்திப் பணம் பறிக்கும் கயவர்களையும் சந்திக்கிறேன்.

இந்த விஷயங்கள் எல்லாம் ஊரில் போலிஸ் டிபார்ட்மெண்ட் உட்பட அனைவருக்கும் தெரிந்துதான் இருக்கிறது. என்றாலும் அவர்கள் கண் மூடி தவம் செய்வது வேறு மோட்சங்களை அடைவதற்காக இருக்கலாம்.

இதைப் படிக்கும், நீங்கள் எல்லாம் நல்லவர்கள். தயவு செய்து உங்கள் ஊரில் பூங்கா என்று எதையும். அமைத்து விடாதீர்கள்! அப்புறம் அந்தப் பூங்காவும் என்னைப் போல் புலம்பத் தொடங்கலாம்!

ராகவா: என்ன சஜஷன்?

ரகுவீர்: என் பேர்ல சொன்ன பழியெல்லாம் அபாண்டம்னு அவருக்கு நிச்சயமாய்த் தெரியுமாம். அவர் கூப்பிட்டது அதை விசாரிக்க மாத்திரம் இல்லே. அவர் சொந்தத்திலே ஒரு பெண் இருக்காளாம். அவளை எனக்குக் கல்யாணம் பண்ணி வைக்க நினைச்சுக்கிட்டிருக்காரும்!

சுசிலா: வாட்? இதை நீங்க எங்கிட்டே சொல்லவே இல்லையே?

முத்து, பாண்டி: எங்கக்கிட்ட கூடத்தான்!

ராகவா: நீ என்ன பதிலைச் சொன்னே? அதுதான் முக்கியம்!

ரகுவீர் (சுசிலாவைப் பரிவுடன் பார்த்து): சுசியைத் தவிர வேற யாரையும் என்னால நினைச்சுக் கூடப் பார்க்க முடியாதுன்னுட்டேன்.

சுசிலா: அப்பாடா!

ராகவா: நீ அப்படிச் சொன்னதும் அவர் ஒண்ணும் மேற்கொண்டு சொல்லலியா?

ரகுவீர்: சொல்லாம இருப்பாரா? உன்னைப் ப்ரமோட் பண்றதா இருந்தேன். பம்பாய்ல மானேஜ்மெண்ட் 'ட்ரெயினிங்குக்கு' அனுப்பறதா இருந்தேன். நீயே எல்லாத்தையும் கெடுத்துக்கிட்டேன்னுர்.

சுசிலா: அவ்வளவுதானே!

ரகுவீர்: அப்புறம் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார் சுசி!

பாண்டி: தமிழ் டெர்ரரிஸ்ட் குண்டா, சீக்கிய தீவிரவாதிகள் குண்டா?

ரகுவீர்: இது டிரான்ஸ்ஃபர் குண்டு. 'உன்னை விஜயவாடா பிராஞ்சுக்கு மாத்தப் போறேன். அவெயிட் ஆர்டர்ஸ்'ன்னுர்.

சுசி: ஐயோ!

நிர்மலா: என்ன .... எல்லாரும் சாப்பிட்டாச்சா? பேசிக்கிட்டே இருந்தா எப்படி? டப்பாவைக் காலி பண்ணிக் கொடுங்க.

மாடசாமி: தே! சும்மாயிரு. நம்ம ரகுவீர் சாரை வேறே ஊருக்கு மாத்திப்புடறதா எம்.டி. ஐயா பயமுறுத்திட்டிருக்காரும்.

நிர்மலா: ஐயே! இதுக்கா இப்பிடி சாப்பாட்டைத் துண்ணும பேச்சு மூச்சு இல்லாம சுருண்டுட்டீங்க? எங்கிட்டே ஒரு வழி இருக்கு சொல்லவா?

(முத்து, பாண்டியன் சாம்பசிவம் எல்லாரும் அவளை நோக்கித் திரும்புகிறார்கள்).

நிர்மலா: இவங்களையெல்லாம் மெரட்டற விதத்திலே மெரட்டினுத்தான் பயப்படுவாங்க!

ரகுவீர்: ஐய்யயோ! நிர்மலா! அவரை ஒண்ணும் பண்ணிப்புடாதே!

ராகவா: மாடசாமி! அவ என்ன சொல்றுன்னு காது கொடுத்துக் கேளு. மத்தவங்க எல்லாரும் இங்க வாங்க.

(நிர்மலா மாடசாமியின் காதில் கிசுகிசுக்கிருள்.)

ராகவா: என்ன சொல்றா அவ மாடசாமி?

மாடசாமி: ரொம்ப பயங்கரமான பிளான் சார். அலேக், சும்மா அலேக்கான பிளான்தான் சொல்லுது.

ராகவா: அதான் என்னது?

மாடசாமி: எம்.டி. சாரை அலேக்காத் தூக்கிக்கினு போயிடறது. டிரான்ஸ்ஃபர் இல்லேன்னு உடறது!

ரகுவீர்: ஐயோ வேண்டாம்! அப்புறம் உத்தியோகம் போய் போலீஸ் லாக்கப்பிலே தான் படுக்கணும். நான் விஜயவாடாவுக்கே போறேன். 119 டிகிரி வெயில்லே சாகறேன்!

நிர்மலா: என்ன சார், சுத்தப் பயந்தாங் கொள்ளியா இருக்கியே! நம்ம பேட்டை ஆளுங்க கிட்டே சொல்லி நான் ஏற்பாடு பண்ணறேன்!

பாண்டி: ஹா! இது விமான ஹைஜாக்கை விட சுவாரஸ்யமா இருக்கும் போலிருக்கே!

(திரை)

(தொடரும்)

# மாதம் ஒரு மாவட்டம்

அண்ணா மாவட்ட மக்களுக்கு......

**நினைவிருக்கிறதா? கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில் ஆருவது மாவட்டமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது அண்ணா மாவட்டம்தான் என்பது! உங்கள் மாவட்டத்திலுள்ள குறைகளும் அநீதி பற்றிய முறையீடுகளும் தவிர, பெரிய சாதனைகள் பற்றிய கடிதங்களும் கல்கி அலுவலகத்திற்கு வந்துசேர வேண்டிய கடைசி தேதி: 20.6.86.**

உடனடியாக எழுதி அனுப்புங்கள்!

— ஆசிரியர்.



கல்கி: நாகர்கோவில் டவுன் என்று எடுத்துக் கொண்டால் பஸ் ஸ்டாண்டு பிரச்னை தான் பெரிய பிரச்னை. பள்ளமான இடத்தில் அமைந்திருப்பதால் மழைக்காலத்தில் பயணிகள் உள்ளே நுழைய முடியாத அளவுக்கு வெள்ளம் வருகிறது என்கிறார்கள்....

கன்னியாகுமரி கலெக்டர் சையத் முனீர் ஹோதா: உண்மைதான். இப்போதுள்ள இடத்திலிருந்து சுமார் ஒரு கி.மீட்டர் தூரத்திலுள்ள பெருமாள்குளம் என்ற இடத்திற்கு மாற்றத் தேவையான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுக் கொண்டு வருகின்றன.

கல்கி: கன்னியாகுமரி — திருவனந்தபுரம் தேசிய நெடுஞ்சாலையிலுள்ள மார்த்தாண்டத்தில் பஸ் ஸ்டாண்டே இல்லை. அதனால் ஏற்படும் அவதிகளை நாங்களே நேரில் பார்த்தோம்.

கலெக்டர்: அங்கே இரண்டு 'குரூப்'கள் இருக்கின்றன. அதனால் அங்குள்ள பஸ் ஸ்டாண்டுக்குத் தோதான இரண்டு இடங்களில் ஒன்றைக் கேட்கும்போது அதைச் சேர்ந்த குரூப் 'ஏன் இன்னொர் இடத்தைத் தேர்ந்தெடுக்கக் கூடாது?' என்று பிரச்னையைக் கிளப்புகிறார்கள். இது கடந்த பத்தாண்டாகவே இருந்து கொண்டு வரும் நிலை. இப்போது ஏறத்தாழ சரியாகிவிட்டது என்றே சொல்லலாம். எனவே, அங்கு விரைவில் பஸ் ஸ்டாண்டு ஏற்பட்டுவிடும்.

கல்கி: நாகர்கோவிலிலுள்ள ஒரேயொரு பூங்காவையும் சரியாகப் பராமரிப்பதில்லை. பூங்காவுக்குள் உள்ள லைப்ரரியிலும் சரியான விளக்கு வசதிகள் இல்லை....

கலெக்டர் (அருகிலிருந்த நகராட்சி கமிஷனர் சண்முகத்தைச் சுட்டிக் காட்டிக் கொண்டே): இனி சரியானபடி பராமரிக்கப்படும் என்று நம்புகிறேன்.

கல்கி: நாகர்கோவிலில் உள்ள ஹரிஜன மாணவர் விடுதியின் நிலைமை படு மோசம். நூறு பேர் இருக்க வேண்டிய இடத்தில் நூற்றிப் பதினெட்டுப் பேர் தங்கியிருக்கிறார்கள். ஆறு பாத்ரூம்கள் இருந்தாலும் இரண்டே இரண்டில்தான் தண்ணீர் வருகிறது. கழிப்பிடங்களில் தண்ணீரே வருவதில்லை....

கலெக்டர் (கமிஷனர் சண்முகத்தை நோக்கி): என்ன மிஸ்டர் சண்முகம்! அங்கே தங்கியிருக்கும் மாணவர்களுக்கு உங்கள் நகராட்சி லாரிகளின் மூலம் தண்ணீர் சப்ளை செய்ய முடியுமா?

கமிஷனர் சண்முகம்: செய்கிறோம் சார்.

கல்கி: இவற்றோடு அங்குள்ள மாணவர்களுக்கு இன்னொரு பிரச்னையும் இருக்கிறது. அதாவது அந்த விடுதி காம்பவுண்டுக்குக் கேட் இல்லாததால் இரவு நேரங்களில் அங்குள்ள மைதானத்தில் விபசாரம் நடக்கிறதாம். மாணவர்கள் சொன்னார்கள், இத்தனைக்கும் அந்த விடுதி போலீஸ் சூப்பரின்டண்ட் ஆபீஸ் அருகில்தான் இருக்கிறது!

கலெக்டர்: அப்படியா? (அருகிலிருந்த போலீஸ் டி.எஸ்.பி. ராஜேந்திரனைப் பார்க்கிறார்.)

டி.எஸ்.பி.: உடனடியாக அங்கு காவலை அதிகப்படுத்துகிறோம் சார். இனி இது போல் புகார் வராமல் பார்த்துக் கொள்கிறேன்.

கல்கி: இவை எல்லாவற்றையும் விட மோசமான விஷயம் ஒன்று உண்டு. அந்த மாணவர்கள் சொன்ன குறைகளை ஒரு தினசரிப் பேப்பர் வெளியிட்டவுடன், ஹரிஜன நலத்துறை அலுவலர் ஒருவர் அந்த மாணவர்களைப் பார்த்து, 'ஓசிக் கஞ்சி குடிக்க வந்தவனுங்களுக்கு என்ன கொழுப்பு?' என்று தகாத வார்த்தைகளைச் சொல்லித் திட்டினாராமே, உண்மைதானா?

கலெக்டர் (பக்கத்திலிருந்த ஹரிஜன நலத்துறை அலுவலர் பாலசுப்ரமணியனைப் பார்த்து): உண்மைதானா?

# "உங்கள் கேள்விகளுக்கு என் செயல்களே சரியான பதில்கள்..."

பாலசுப்ரமணியன்: அது சுத்தப் பொய் சார். அப்படி யாரும் அவர்களைத் திட்ட வில்லை.

கல்கி: மாணவர்கள் எதற்காகப் பொய் சொல்ல வேண்டும்?

கலெக்டர்: சரி, இனி நான் பார்த்துக் கொள்கிறேன். ஆனாலும் ஒன்று. அந்த மாண வர்களுக்குக் குறைகளே இல்லை என்று நான் சொல்ல வரவில்லை. அந்தப் பேப்பரில் வந்த செய்திகளில் சில பொய்யானவை; மிகைப் படுத்தப்பட்டவை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

கல்கி: கன்னியாகுமரிக்குத் தினசரி சுமார் ஐயாயிரம் சுற்றுலாப் பயணிகள் வருகிறார் கள். அப்படியிருந்தும் அங்கு தண்ணீர்ப் பிரச்னை ஒரு பெரிய பிரச்னையாகத்தான் உள்ளது. கழிப்பறைகளுக்குக் கூடப் போது மான தண்ணீர் வசதி இல்லாதது அவலம்...

கலெக்டர்: உண்மைதான். முக்கூட லிலிருந்து வரும் சப்ளை போதுமானதாக இல்லை என்பதால் முடிந்தவரை லாரிகளைக் கொண்டு தண்ணீர்ப் பிரச்னையைச் சமாளித் துக் கொண்டுதான் வருகிறோம். இப்போது முப்பத்தொரு லட்ச ரூபாய் செலவில் புதிய திட்டங்களையும் தயாரித்திருக்கிறோம். எனவே விரைவில் இந்த பிரச்னைக்கு ஒரு முடிவு கட்டிவிடுவோம்.

கல்கி: அங்குள்ள பூங்கா ஒரு குப்பைத் தொட்டியாகத்தான் காட்சியளிக்கிறது...

கலெக்டர்: அதை இப்போது மறுபடியும் புதுப்பிப்பதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன.

கல்கி: அங்கு வரும் சுற்றுலாப் பயணி களை அங்கு பல்வேறு பொருள்களை விற்றுக் கொண்டிருக்கும் சிறு சிறு வியாபாரிகள் விலைகளில் ஏமாற்றுகிறார்கள் என்று பலரும் புகார் சொல்கிறார்களே?

கலெக்டர்: அப்படிப்பட்ட நிலை ஏற்படா மல் அங்குள்ள அந்த வியாபாரிகளைக் கண் காணிக்கச் சொல்கிறேன்.

கல்கி: இவற்றோடு அங்குள்ள தமிழ்நாடு சுற்றுலாத்துறையினரால் நடத்தப்படும் தமிழ் நாடு ஹோட்டலில் முன்கூட்டியே ஆர்டர் கொடுத்தால்தான் சாப்பிட முடியும் என்ற நிலை. சுற்றுலாப் பயணிகளுக்கு இது சாத் தியமா? எனவே டிபன் போன்ற உணவு வகைகளாவது எப்போது போனாலும் சாப் பிடக் கிடைக்க நீங்கள் சிபாரிசு செய்ய வேண்டும்.

கலெக்டர்: அவசியம் செய்கிறேன்.

கல்கி: மேலும் கன்னியாகுமரியிலுள்ள காந்தி மண்டபத்தின் பராமரிப்பும் சரி வர இல்லை.

கலெக்டர்: அது எங்களுடைய பராமரிப் பின் கீழ் வரவில்லை. அதனால் நான் ஏதும் செய்ய இயலாது.

கல்கி: கன்னியாகுமரியை போலவே திற்பரப்பு நீர்வீழ்ச்சியும் ஓர் அழகான—அற்புத மான சுற்றுலா மையமாக ஆக வாய்ப்பிருக் கிறதே!

கலெக்டர்: அதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டு வருகின்றன.

கல்கி: தோவாளையிலுள்ள அரசு மருத்துவ மனையில் இரண்டு டாக்டர்களுக்கான இட



மிருந்தும் கடந்த ஐந்தாண்டு காலமாக ஒரே யொரு டாக்டர் மட்டும்தான் இருக்கிறார். ஏன் அப்படி?

கலெக்டர்: நான் பீஹாரிலிருந்து வந்தவன். அப்படியிருந்தும் எனக்கு இந்தக் கன்னியாகுமரி மாவட்டம் மிகவும் பிடித்திருக்கிறது. ஆனால் தமிழ்நாட்டிலுள்ளவர்களுக்கு அப்படியில்லை. இந்த மாவட்டத்திற்கு யார் வந்தாலும் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் மாற்றல் வாங்கிக் கொண்டு செல்லத்தான் துடிக்கிறார்கள். இதுதான் காரணம். டாக்டர்களை நியமித்தாலும் அவர்கள் அங்கே தொடர்ந்து வேலை பார்ப்பதில்லை. இதற்கு நான் என்ன செய்ய முடியும்?

கல்கி: தோவாளைப் பகுதியில் மட்டும் ஒரு நாளைக்கு ஆறு மணி நேரம்தான் மின்சார சப்ளை கிடைக்கிறது. ஏன் அப்படி?

கலெக்டர்: மணவாளக் குறிச்சியில் ஒரு சப்—ஸ்டேஷன் நிர்மாணிக்கப்படுவதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. அது அமைந்துவிட்டால் அங்கும் தொடர்ந்து மின்சார சப்ளை கிடைக்கும்.

கல்கி: நாகர்கோவிலிலுள்ள ஆர்.டி.ஓ. ஆபீஸ் பற்றி யாரிடமும் ஒரு நல்ல அபிப்ராயமே இல்லை. லைசென்ஸ் வாங்க வருபவர்களையெல்லாம் நாய்களைப் போல்தான் நடத்துகிறார்கள் என்கிற அளவுக்கு மக்கள் கோபப்பட்டுச் சொல்கிறார்கள்.

கலெக்டர்: இப்போது ஆர்.டி.ஓ. ஆபீஸ் எனது கட்டுப்பாட்டில் இல்லை. (இந்த பதிலை கலெக்டர் கூறும்போது ஆர்.டி.ஓ. ஆபீஸிலிருந்து யாரும் வந்திருக்கிறார்களா என்று சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டேதான் கூறினார். ஆனாலும் அங்கு வந்திருந்த போக்குவரத்து ஆய்வாளர் சந்திரமோகன் வாய் திறக்கவில்லை!)

கல்கி: பேச்சிப் பாறை, பெருஞ்சாணி அணைக்கட்டுகளில் முன்பெல்லாம் நாற்பதடி அளவுக்குத் தண்ணீர் தேங்குமாம். ஆனால் இப்போது பத்தடி கூடத் தேங்குவதில்லை. காரணம் சரியாகத் தூர் எடுத்துப் பராமரிக்கப்படாததுதான் என்கிறார்களே?

கலெக்டர்: நிச்சயமாகக் கிடையாது. முன்பு பெய்த அளவுக்கு இப்போது மழை பெய்வதில்லை. அதுதான் காரணம்.

கல்கி: சுசீந்திரத்திலுள்ள ஆஸ்ராமம் பகுதியிலிருக்கும் ஆயுர் வேத மருத்துவமனை வாடகைக் கட்டடத்தில் இருப்பதால் அதை விரிவுபடுத்த முடியவில்லை. முன்பு அம்மருத்துவ மனைக்காக ஊர் மக்களால் கொடுக்கப்பட்ட இடம் இப்போது இந்து அறநிலையத் துறையின் கட்டுப்பாட்டில் உள்ளதாம். அதை விரைவாக வாங்கிக் கொடுக்க ஆவன செய்தால் மிகுந்த உதவிகரமாய் இருக்கும் என்கிறார்கள்!

கலெக்டர்: இதுவரை இது என் கவனத்திற்கு வரவில்லை. உடனடியாக ஆவன செய்கிறேன்.

கல்கி: அங்கேயே சுடுகாட்டுக்குச் செல்லும் பாதையைச் சில தனி நபர்கள் ஆக்ரமித்துக் கொண்டதால் இப்போது பாதையின்றித் தொல்லைப்படுகிறார்கள்....

கலெக்டர்: இதற்கும் ஆவன செய்கிறேன்.

கல்கி: தக்கலையிலுள்ள மருத்துவமனை கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள மருத்துவமனைகளில் இரண்டாவது பெரிய மருத்துவமனை. அப்படியிருந்தும் அங்கு சரியானபடி பிரசவவார்டுகள் இல்லை. அங்குள்ள கிணற்று நீரும் சுகாதாரமானதாக இல்லை என்கிறார்கள். இவற்றோடு அங்குள்ள தனியார் மருத்துவமனைக் கழிவு நீரெல்லாம் ஊர் ஏல்லையிலுள்ள குளிக்கும் குளத்தில் கலக்கிறது!

கலெக்டர்: உடனடியாக எடுக்க முடிந்த நடவடிக்கைகளை எடுக்கிறேன்.

கல்கி: கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள 'காணிக்காரர்கள்' என்று அழைக்கப்படும் சுமார் ஆறாயிரம் மலை ஜாதியினருடைய வாழ்க்கைத் தரமும் மோசமானதாக இருக்கிறதாம். அதற்கு என்ன நடவடிக்கைகளை எடுத்திருக்கிறீர்கள்?

கலெக்டர்: ஆதிவாசிகளுக்காகச் செய்யப்படும் அத்தனை சலுகைகளும் அவர்களுக்குச் செய்யப்பட்டிருக்கின்றன. இருந்தாலும் அவர்களின் வாழ்க்கைத் தரம் உயரவில்லை என்பது உண்மைதான். காரணம், அவர்களில் பெரும்பாலோர் குடிக்கு அடிமையாகி வேலை செய்வதையே விட்டுவிட்டனர். இந்த நிலையில் எப்படி அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயர முடியும்? இனியும் அவர்களுக்கு என்ன செய்வது என்பதுதான் புரியவில்லை.

கல்கி: முட்டம், கடியப் பட்டினம் போன்ற கடற்கரையோரக் கிராமங்களில் குடிநீர்ப் பிரச்னை அதிகமாக இருக்கிறது. கடியப் பட்டினத்திலுள்ளவர்கள் சுமார் இரண்டரை கி.மீ. தூரத்திலுள்ள மணவாளக்குறிச்சிக்குப் பஸ்ஸில் வந்து குடிநீர் எடுத்துச் செல்கிறார்கள்....

கலெக்டர்: கடற்கரையோரக் கிராமங்களின் குடிநீர்ப் பிரச்னையைத் தீர்ப்பதற்காகப் பதினேழு லட்சம் ரூபாய் செலவில் திட்டம் தீட்டப்பட்டு அதற்கான ஏற்பாடுகளும் நடந்து கொண்டிருக்கின்றன.

கல்கி: மணவாளக் குறிச்சியில் பாலம் கட்டும் வேலை கடந்த ஐந்தாண்டு காலமாக நடந்து கொண்டிருக்கிறது. எப்போது முடியும்? ஏன் இந்தத் தாமதம்?

கலெக்டர்: பாலத்திற்காகப் போடப்படும் அஸ்திவாரத்தைச் சரிவரப் போட முடியாத அளவுக்கு அந்த மண்வாகு அமைந்து விட்டதுதான் காரணம். இப்போது அந்தக் குறை கண்டுபிடிக்கப்பட்டுச் சரி செய்யப்பட்டு விட்டது. விரைவில் முடிந்துவிடும்.

கல்கி: குளச்சல் துறைமுகத்தை விரிவு



• கல்கி பேட்டியின் போது கலெக்டருடன் இதர மற்ற அதிகாரிகளில் ஒரு பகுதியினர்...

படுத்திவிட்டால் அருகிலுள்ள கொச்சின் துறைமுகம் புகழ் மங்கிவிடும் என்பதால் பல்வேறு தரப்பிலிருந்தும் அதற்குத் தடைகள் ஏற்பட்டுக் கொண்டிருப்பதாகச் சொல்கிறார்களே?

கலெக்டர்: அதெல்லாம் அரசியல் பிரச்னே. தயவு செய்து அது பற்றியெல்லாம் என்னிடம் கேட்காதீர்கள்.

கல்கி: அணுசக்திக்குப் பயன்படும் ஒரு வித மணலே வெளிநாடுகளுக்குக் கொண்டு செல்வதற்காகக் குளச்சல் துறைமுகத்திற்கு வரும் கப்பல்களில் அந்த மணலே ஏற்றுவதற்கு ஓர் இணைப்புப் பாலம் அவசியம். அதற்காக முன்பு இருபத்து நான்கு லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதாகத் தமிழக அரசு அறிவித்திருந்தும் வேலே நடக்கவில்லே. இப்போது அதன் செலவு நாற்பத்து எட்டு லட்சமாக உயர்ந்துவிட்டது. தாமதத்தைத் தவிர்த்திருந்தால் லட்சக்கணக்கான ரூபாய் மிச்சப்பட்டிருக்குமல்லவா?

கலெக்டர்: இது பற்றியும் நான் ஒன்றும் சொல்வதற்கில்லே.

கல்கி: பாம்பூரி வாய்க்காலின் மேல் ஒரு பாலம் இல்லாததால் சைமன் காலனி, கோடிமுனே, வாணியர் குடி, குறும்பனே.... என்று பதினெரு கிராம மக்களும் மிகுந்த அவதிப் படுகிருர்கள். அங்கே ஒரு பாலம் கட்டினுல் என்ன?

கலெக்டர்: அந்தப் பாலம் கட்டுவதற்கான டெண்டர்கள் விடப்பட்டுள்ளன. விரைவில் கட்டி முடிக்கப்படும்.

கல்கி: லட்சுமிபுரத்திலுள்ள கல்லூரியில் மேனேஜ்மெண்ட் ஒரு 'குரூப்' பாகவும் ஒரு சில ஆசிரியர்கள் ஒரு 'குரூப்' பாகவும் செயல் படுகிருர்கள். அதனுல் கல்லூரி வளர்ச்சி பாதிக்கப்படுவதோடு போதுமான வகுப்பறை வசதி கூட இல்லாமல் — ஏன், உட்காருவதற்குப் 'பெஞ்ச்' வசதி கூட இல்லாமல் மாணவர்கள் கஷ்டப்படுகிருர்கள். இரு குரூப்களேயும் நாங்கள் விசாரித்த பிறகு அந்தக் கல்லூரியை முழுக்க முழுக்க அரசாங்கமே எடுத்துக் கொள்ளாத வரையில் அதற்கு ஒரு விடிவு காலமே இல்லே என்றுதான் தோன்றுகிறது. அதற்கு நீங்கள் ஏதேனும் முயற்சி செய்யக் கூடாதா?

கலெக்டர்: நிச்சயமாக என்னுல் ஆன வரை முயற்சி செய்கிறேன்.

கல்கி: சேரமங்கலத்திலுள்ள கொடித் தோட்டம் என்ற பகுதியில் இருபத்து மூன்று ஹரிஜனக் குடும்பங்கள் வசிக்கின்றன. அவர்களுக்குப் பாதையே இல்லே. இதற்கு நீங்கள் ஒரு தீர்வு காணக் கூடாதா?

கலெக்டர்: அந்த ஹரிஜனங்களுக்குப் பாதை விட்ட நிலச் சொந்தக்காரர்கள் இப்போது கோர்ட்டில் 'ஸ்டே' வாங்கியிருக்கிருர்கள் என்று நினேக்கிறேன்.

கல்கி: சம்பந்தப்பட்ட நிலச் சொந்தக்காரர்கள் இருவரில் ஒருவரைப் பார்த்தோம். அவர்தான் அந்த ஹரிஜனங்களின் பாதை வசதிக்காக மூன்றடி அகலம் ஒதுக்கியிருப்பதாகக் கூறினுர். காட்டுங்கள் என்று நாங்கள் அவரை அழைத்துச் சென்றபோது அவர் தடுமாறினுர்! ஆக, நீங்கள் இரு தரப்பினரையும் நேரடியாகச் சந்தித்தால் ஒரு சுமுகமான தீர்வு ஏற்பட வாய்ப்பிருக்கிறது.

கலெக்டர்: என்னுல் முடிந்ததைச் செய்கிறேன்.

கல்கி: தக்கலே மேல்நிலேப் பள்ளியில் பணிபுரிந்து கடந்த 82ம் ஆண்டு ஓய்வு பெற்ற கிருஷ்ணய்யர் என்பவருக்கு இன்னும் முழு வைப்பு நிதியும், ஓய்வூதியமும் கிடைக்கவில்லே. பலருக்கு மனு எழுதியும் ஒன்றும் நடக்கவில்லேயாம். நீங்கள் ஏதாவது செய்ய முடியுமா?

கலெக்டர்: பென்ஷனு? அது போன்ற விஷயங்களே நான் உடனடியாகக் கவனிப்பவன். அவரை என்னே வந்து பார்க்கச் சொல்லுங்கள். உடனடியாக ஓர் அலுவல

ரைச் சென்னைக்கு அனுப்பி அவருக்கான வைப்பு நிதித் தொகை, பென்ஷன் ஆகிய வற்றைக் கையோடு வாங்கி வரச் சொல்கிறேன்.

கல்கி: கருங்கல் என்ற இடத்தில் சமீப காலத்திற்குள்ளாகவே தொடர்ந்து மூன்று கொலைகள் நடந்தும் போலீஸார் சரிவர நடவடிக்கைகள் எடுக்கவில்லையென்று பொது மக்கள் புகார் சொல்கிறார்கள். அதோடு அந்த போலீஸ் ஸ்டேஷனே ஜனதா கட்சி அலுவலகம் போல் செயல்படுவதாகவும் அதிருப்திப்படுகிறார்கள்.

கலெக்டர்: அந்தச் சம்பவங்கள் குறித்து இன்னும் புலனாய்வு நடந்து கொண்டுதான் இருக்கிறது. பொது மக்களின் குற்றச்சாட்டு சரியானதல்ல.

கல்கி: கீரிப் பாறையில் அமைந்துள்ள 'அரசு ரப்பர் கழகம்' — இது பற்றித்தான் ஏராளமான குற்றச்சாட்டுகள் இருக்கின்றன!

கலெக்டர்: அது பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. (அருகிலிருந்த ரப்பர் கழகத்தின் மானேஜிங் டைரக்டர் பத்மநாபனைப் பார்த்து) இவர்கள் கேள்விக்கான பதிலை நீங்கள்தான் சொல்ல வேண்டும். (பிறகு நம்மைப் பார்த்து) ம், கேளுங்கள்!

கல்கி: அரசு ரப்பர் கழகம் பயிரிடும் ரப்பர் தனியார் பயிரிடும் ரகத்தை விட உயர்வானது. அதாவது ஹெக்டேர் ஒன்றுக்கு ஆண்டுக்குச் சுமார் ஆயிரத்து நானூறு கிலோ முதல் ஆயிரத்து ஐநூறு கிலோ வரை ரப்பர் கிடைக்க வேண்டும். ஆனால் நிர்வாகச் சீர்கேட்டால் ஐநூற்று இருபத்தைந்து கிலோ தான் கிடைக்கிறதாமே, உண்மையா?

ரப்பர் கழக எம்.டி. பத்மநாபன்: ஆயிரத்தைநூறு கிலோவெல்லாம் கிடைக்காது. எழுநூறிலிருந்து ஆயிரம்கிலோதான் கிடைக்கும். அது கிடைத்துக் கொண்டுதான் இருக்கிறது.

கல்கி: ரப்பர் கழகத்தின் நிர்வாகத்தைச் சீர்படுத்துவதற்காக இதன் ஜெனரல் மானேஜர் சித்திரபு ஐ.எஃப்.எஸ்., கடந்த 12.10.84 அன்று நடந்த டைரக்டர்ஸ் மீட்டிங்கில் சில ஆலோசனைகளைக் கூறினாராம். அது தொடர்பாக உங்கள் தலைமையில் ஒரு கமிட்டி போடப்பட்டதாம். ஆனாலும் இதுவரை அந்தக் கமிட்டி கூட்டப்படவேயில்லையாமே, நிஜமா?

பத்மநாபன்: அந்தக் கமிட்டியில் சிலர் — ஆர்கனைஸேஷன் செய்ய வேண்டியிருந்ததால்தான் இதுவரை கூட்டப்படவில்லையே தவிர, வேறு காரணங்களுக்காக அல்ல!

கல்கி: அண்மையில் இறக்குமதி செய்யப்பட்ட சுமார் ஐம்பது லட்ச ரூபாய் மதிப்புள்ள மெஷின்களுக்கான பராமரிப்புச் செலவுகள் அந்த மெஷின்களுக்காகச் செலவழிக்கப்படுவதில்லை. ஆபீஸர்களின் பாக்கெட்டுக்குச் சென்று விடுவதாகச் சொல்கிறார்கள்!

பத்மநாபன்: அது சுத்தப் பொய்.

கல்கி: வியாபாரிகளுக்கு விற்கப்படும் ஸ்கிராப் ரப்பர் எடை போடுவதில் நிறையத் தில்லுமுல்லுகள் நடக்கின்றனவாம். அதாவது லஞ்சம் கொடுக்கும் வியாபாரிகளுக்கு அளவுக்கு அதிகமான ஸ்கிராப் ரப்பர் எடை போட்டுக் கொடுக்கப்படுகிறதாம். மற்றவர்களுக்கு அந்த ரப்பரின் மேல் தண்ணீர் தெளித்து அதாவது ஒன்பது கிலோ ரப்பரைப் பத்துக் கிலோவாக்கிக் கொடுக்கப்படுகிறதாமே?

பத்மநாபன்: இதுவும் சுத்தப் பொய். பல தொழிலாளர்களுக்கு மத்தியில் போடப்படும் எடையில் எப்படித் தவறு செய்ய முடியும்?

கல்கி: தவறு நடந்திருக்கிறது. கடந்த 18.10.85 அன்று அப்படி நடந்துதான் இருக்கிறது. அன்றைக்கு ஸ்கிராப் ரப்பரை ஏற்றிச் சென்ற **TNK 7119, KRT 1089, KLV 8946, KRT 7706** ஆகிய நான்கு லாரிகளிலும் குறிப்பிட்ட எடைக்கு அதிகமாகவே ரப்பர் ஏற்றிச் செல்லப்படுகிறது என்று தகவல் தெரிந்து **TNK 7119** லாரியை எடை போட்டுப் பார்த்ததில் நூற்று முப்பத்தாறு கிலோ ரப்பர் அதிகமாக இருந்ததாம். அப்படியிருந்தும் மற்ற மூன்று லாரிகளை எடை போடாமலேயே அனுப்பிவிட்டார்களாம். அது ஏன்?

பத்மநாபன்: அப்படியெல்லாம் ஒன்றுமே இல்லை. ஒரு லாரியை எடை போட்டுப் பார்த்ததில் எடை சரியாக இருந்தது. அதனால் மற்ற லாரிகளை எடை போட வேண்டிய அவசியம் ஏற்படவில்லை.

கல்கி: ரப்பர் கழகத் தொழிற்சாலைக்கு ஆண்டு தோறும் லட்சக்கணக்கான ரூபாய்களுக்கு கெமிக்கல்ஸ்களையும், ஆசிட்டையும் சப்ளை செய்பவர் உங்கள் கழக கெமிஸ்ட்டின் சொந்தத் தம்பியாமே! அதனால் தரமில்லாதவற்றையும் தரமானதென்று சான்றிதழ் தருகிறாராமே அந்த கெமிஸ்ட்! உண்மை தானா?

பத்மநாபன்: நாங்கள் தரமானவற்றைத் தான் வாங்குகிறோம்.

கல்கி: ஏழு மாதங்களுக்கு முன்பு உங்கள் ரப்பர் தொழிற்சாலையைச் சுற்றிச் சுமார் ஐந்து லட்சம் செலவில் கட்டப்பட்ட காம்பவுண்டு சுவரைத் தேய்த்தாலே போதும்! சிமெண்ட் பூச்சுகளெல்லாம் பெயர்ந்து விழுகின்றன. அதாவது காம்பவுண்டு சுவருக்காகக் கொண்டு வரப்பட்ட சிமெண்டில் மூன்று லாரி சிமெண்டை வெளி மார்க்கெட்டில் விற்றுவிட்டுக் குறைச்சலான சிமெண்டில் கட்டியதால்தான் சுவர் இப்படி பலமில்லாமல் இருக்கிறது என்கிறார்களே, உண்மைதானா?

பத்மநாபன்: இதுவும் உண்மையல்ல.

கல்கி: ரப்பர் ஏற்றப்பட்ட லாரிகளை எடை போடும் வே — பிரிட்ஜுக்கான டெண்டரும் வேண்டிய நபர்களுக்கு மட்டுமேதான்

கொடுக்கப்படுவதாகச் சொல்கிறார்களே?

பத்மநாபன்: டெண்டர் கேட்பவர்களுக்குத்தானே கொடுக்க முடியும்.

கல்கி: மற்றவர்களுக்கு டெண்டர் ஃபாரம் கொடுத்தால்தானே டெண்டர் கோர முடியும்?

பத்மநாபன்: கேட்டவர்களுக்கெல்லாம் கொடுத்துத்தான் இருக்கிறோம்.

கல்கி: இது போன்ற புகார்கள் நடக்கும் முக்கியமான நாட்களிலெல்லாம் நீங்கள் லீவில் சென்று விடுகிறீர்களாமே? அதெல்லாம் தற்செயலான ஒன்றா அல்லது வேறு காரணங்கள் உண்டா?

பத்மநாபன்: ஒரே ஒரு முறைதான் நான் அப்படி லீவில் இருந்திருக்கிறேன். எல்லாச் சமயங்களிலும் அல்ல.

கல்கி: நன்றி மிஸ்டர் பத்மநாபன்! (மீண்டும்கலெக்டரிடம்)சாதாரணமாகக்கன்னியாகுமரி மாவட்டத்தில் சட்டம் — ஒழுங்கு என்பது ஒரு பிரச்னையாகவே இருக்கிறதே ஏன்?

கலெக்டர்: உண்மைதான். தமிழகத்தில் சென்னைக்கு அடுத்தபடியாக இந்தமாவட்டத்தில்தான் படித்தவர்கள் அதிகம். வேறு யாரை விடவும் இந்த மாவட்ட மக்களுக்கு விழிப்புணர்ச்சியும் அதிகம். வேலையில்லாத் திண்டாட்டமும் அதிகமாக இருப்பதால் பிரச்னைகள் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. அதனால்தான் நான் இப்போது சுய வேலை வாய்ப்பு, விளையாட்டு என்று மக்களைத் திசை திருப்பும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறேன். வெறும் கலாட்டாக்களிலும், சண்டைகளிலும் வீணாகும் மக்கள் சக்தியைப் பயனுள்ள முறையில் திசை திருப்பிப் பயனுள்ள விளைவுகளைத் தோற்றுவிக்க முடியுமென்றும் நம்பிச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறேன்.

கல்கி: உண்மையில் இந்த ஆண்டு மண்டைக்காடு பகவதியம்மன் கோவில் திருவிழா மிகவும் சுமுகமான முறையில் நடந்து முடிந்ததற்கு நீங்களும், போலீஸ் சூப்பரிண்டெண்ட் தாபாவும் மேற்கொண்ட முயற்சிகள்தான் காரணம் என்று பலரும் பாராட்டுகிறார்கள்.

கலெக்டர்: அது எங்கள் முயற்சி மட்டுமல்ல; அனைத்து அலுவலர்களின் — மக்களின் முயற்சியும் கலந்தது என்பதுதான் மிகவும் சரி.

கல்கி: நாகர்கோவிலிலிருந்து கேரளாவுக்கு அரிசி கடத்துவது அதிகம் என்று சொல்கிறார்களே!

கலெக்டர்: அது கடத்தலே அல்ல. திருவனந்தபுரத்திலுள்ளவர்கள் பெரும்பாலும் நாகர்கோவில் வந்துதான் அரிசி வாங்கிச் செல்கிறார்கள். ஒருவர் ஐந்து கிலோ வரை அரிசி கொண்டு செல்வதைத் தடை செய்ய முடியாது. அப்படி எடுத்துச் செல்வதைத் தடை செய்துவிட்டால்நாகர்கோவிலிலுள்ள கடைக்காரர்கள்தான் பாதிக்கப்படுவார்கள். அதனால்தான் பேசாமல் இருக்கிறேன்.

கல்கி: கன்னியாகுமரி மாவட்டத்தில்



''டாக்டர் வெறும் எம்.பி.பி.எஸ்.னு போர்டு போட்டிருக்கிறார். நீ அவரை 'ஸ்பெஷலிஸ்ட்'டுனு சொல்றியே, எப்படி?''

''முதல் லிஸ்ட்லே செலக்ஷன் ஆகாமல், பணத்தை அடிச்சு ஸ்பெஷல் லிஸ்ட்ல தன் நம்பரைக் கொண்டு வந்தவர்னு சொல்ல வந்தேன்!''

— கடுவை கோபால்சாமி

சுமார் பதினைந்து சதவிகித மலையாள மக்கள் வாழ்கிறார்கள். அவர்களை மலையாளிகள் என்று தமிழ்நாட்டிலும், தமிழர்கள் என்று கேரளாவிலும் ஒதுக்கி வைப்பதாக வருத்தப்படுகிறார்களே?

கலெக்டர்: அப்படியொரு சூழ்நிலை இருப்பதாக நான் நினைக்கவில்லை. கன்னியாகுமரியிலுள்ள பலர் திருவனந்தபுரத்தில் வேலை பார்க்கிறார்களே, அது எப்படி? அவர்கள் நினைப்பது உண்மையல்ல; அது ஒரு மனோரீதியான பிரமை மட்டுமே!

கல்கி: கடைசியாக ஒன்று. நேற்று நாங்கள் தமிழக இந்து முன்னணித் தலைவர் தாணுலிங்க நாடாருடன் பேசிக் கொண்டிருந்தபோது அவர் உங்களைப் பற்றி மிகவும் உயர்ந்த அபிப்பிராயம்தான் சொன்னார். இருந்தாலும் கடைசியில், 'மதக் கலவரம் என்று வரும்போது கலெக்டர் கூட ஒரு கலெக்டராக இல்லாமல் முதலில் தாம் ஒரு முஸ்லிம் என்றுதான் எண்ணிச் செயல்படுவார்' என்றார். அது சம்பந்தமாக நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

கலெக்டர்: (சிரிக்கிறார்) முதலில் நான் ஓர் இந்தியன். இரண்டாவதாக நான் ஒரு கலெக்டர். பிறகுதான் மற்றதெல்லாம். இதை நான் சொல்வதைவிட என் செயல்களின் மூலம் நீங்களே தெரிந்து கொள்வதுதான் சரியான பதிலாக இருக்க முடியும்.

கல்கி: மிக்க நன்றி. எங்கள் சந்திப்பிற்காக உங்களோடு பணியாற்றும் மற்ற முக்கியமான அலுவலர்களுக்கும் சர்க்குலர் அனுப்பி வரவழைத்து உடனிருக்கச் செய்தமைக்கு மீண்டும் நன்றி, வணக்கம்.

கலெக்டர்: அரசாங்கத்தின் திட்டங்களை அதிகாரிகள் சரிவரச் செயல்படுத்துகிறார்களா என்பதை உங்களைப்போன்ற பத்திரிகையாளர்கள் இப்படி வந்து சரிபார்த்து விவாதிப்பது நல்ல அறிகுறி. அதற்காக உங்களைப் போன்ற பத்திரிகையாளர்களை வரவேற்பதில் மகிழ்ச்சியடைகிறேன். வணக்கம்!

# “உண்மைகளை எழுதாமல் இருக்க முடியாது!”



**கன்னியாகுமரி மாவட்டத்தைப் பற்றி எழுதும் போது, மண்டைக்காடு கலவரத்தைப் பற்றியும், அதன் பிறகு நியமிக்கப்பட்ட நீதிபதி வேணுகோபால் கமிஷன் அறிக்கையைப் பற்றியும் குறிப்பிடாமல் இருக்க முடியாது. வேணுகோபால் கமிஷனின் அறிக்கையை அரசு அப்படியே ஏற்றுக் கொண்டுள்ளது. ஃபோனில் ''உங்கள் அறிக்கையைப் பற்றிப் பேச வேண்டுமே'' என்று சொன்னவுடன் சந்தோஷமாக வரச் சொன்னார் நீதிபதி.**

“மண்டைக்காடு கலவரங்களுக்குப் பிறகு என்னை ஒரு நபர் கமிஷனாகப் போட்டவுடன், விசாரணையை ஆரம்பிப்பதற்கு முன், நான் செய்த முதல் காரியம் மக்களிடையே ஒரு சுமுகமான சூழ்நிலையை ஏற்படுத்த முயன்றதுதான். கமிஷனின் முதல் கூட்டத்திலேயே 'நான் குற்றவாளிகளைக் கண்டுபிடிக்க இங்கு வரவில்லை; துன்பங்கள் எப்படி நேர்ந்தன; இனி அவ்வாறு நேராமல் தடுப்பதெப்படி? என்பதை ஆராய்ந்து அரசுக்குத் தெரிவிக்கவே வந்துள்ளேன். என்றேன். இது நான் மக்களைச் சந்தித்து உண்மைகளைத் தெரிந்து கொள்ளப் பெரிதும் உதவியது. கலவரம் நடைபெற்ற சிறிது நாட்களில், உணர்ச்சிக் கொந்தளிப்பு அடங்காத சூழ்நிலையில், நான் கிராமங்களுக்குச் சென்று மக்களைச் சந்திப்பது ஆபத்து என்று காவல் துறை எச்சரித்தது. ஆனால், 'மக்களையும் பாதிக்கப்பட்ட இடங்களையும் பார்க்காமல் இருக்க முடியாது' என்று கூறிவிட்டுத் துணிந்து சென்றேன். மக்களும் என்னை நம்பி, நடந்தவைகளைக் கண்ணீர்க் கதைகளாகக் கொட்டினார்கள். ஒன்றுமறியாத அப்பாவி மக்களும், கலவரத்தில் சம்பந்தப்படாத முஸ்லிம் மதத்தினரும் கூடப் பாதிக்கப்பட்டிருந்ததைப் பார்த்தபோது, மோதலின் தன்மை புரிந்தது.

''இதுவரை கலவரங்கள், துப்பாக்கிச் சூடுகள் காரணமாக நியமிக்கப்பட்ட எந்தக் கமிஷனும் இடைக்கால அறிக்கையைச் சமர்ப்பித்ததில்லை. ஆனால், மக்கள் ஒழுங்கான வாழ்க்கை முறைக்குத் திரும்பி வந்தால்தான் விசாரணை முறையாக நடக்கும் என்று நான் இடைக்கால அறிக்கை தாக்கல் செய்தேன். அதன்படி, பாதிக்கப்பட்ட மக்களுக்குப் புனர்வாழ்வு செய்து கொடுக்கப்பட்டது. அதற்காக ஒரு நிதியும் ஆரம்பித்து வைத்து நான் என் முதல் மாதச் சம்பளத்தையும் அந்நிதிக்குக் கொடுத்தேன்.

''பக்கத்துப் பக்கத்து வீடுகளில் இருக்கும் இரண்டு வெவ்வேறு மதத்தைச் சேர்ந்தவர்கள் எப்படித் திடீரென்று பகைவரானார்கள்? என் விசாரணையில் கண்டு கொண்டது என்னவென்றால் நெடு நாட்களாகவே, ஏன் பல வருடங்களாகவே புகைந்து கொண்டிருந்த விஷயம்தான் நெருப்பாக மாறியிருக்கிறது என்பதுதான். மண்டைக்காடு கலவரம், ஒரு காரணமாக அமைந்துவிட்டது. கிறிஸ்துவ மிஷனரிகளின் மத மாற்றச் செயல்கள், இந்து தீவிரவாதிகளின் கிறிஸ்துவ எதிர்ப்புப் போக்கு என்பது இந்த மாவட்டத்தைப் பொறுத்தவரை காலம், காலமாக நடந்தும், வளர்ந்தும் வந்திருக்கிறது. ஒரு சிறுபான்மைச் சமூகம், பெரும்பான்மைச் சமூகத்துடன் சுமுகமான உறவு கொண்டு நல்லெண்ணத்துடன் இருக்க வேண்டும். இது இல்லையென்றால் எந்த ஒரு போலீஸும், சட்டமும், சிறுபான்மை மக்களைக் காப்பாற்ற முடியாது. ஆனால் இந்த இரண்டு சமூகத்தினரும் இணைய முடியாதபடி, பல சுயநலக்காரர்கள் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் அப்பாவி மக்களைத் தூண்டி விடுகின்றனர். கலவரங்களுக்கு மற்றொரு காரணம் சமூகப் பொருளாதாரச் சூழ்நிலைகள். வேலையில்லாமல் ஏராளமான பேர் இருக்கிறார்கள். படித்த மக்கள் அதிகம்தான்; ஆனால், படிக்காத மக்களும் சமமாக இருக்கிறார்கள். அங்கு கிடைக்கும் அரிய மணலை (Rare earth) ஏற்றுமதி செய்யாமல் அதைக் கொண்டு தொழிற்சாலைகள் ஆரம்பித்து வேலை வாய்ப்பு ஏற்படுத்தலாம். ரப்பர், முந்திரி, தேங்காய் நார், இவைகளைக் கொண்டு எண்ணற்ற தொழிற்சாலைகள் நிறுவலாம். குளச்சலில் ஒரு துறைமுகத்தைக் கொண்டு வரலாம். இப்படிப் பல ஆலோசனைகளை என் அறிக்கையில் தெரிவித்துள்ளேன்.

''இந்தக் கலவரங்களின் போது போலீஸ் நடந்து கொண்ட முறை சற்றும் சரியில்லை. இறந்து போனவர்களின் உடலைச் சுமந்து கொண்டு எட்டு மைல் ஊர்வலம் போக அனுமதித்திருக்கிறார்கள். இது எவ்வளவு பெரிய தவறு! இதனால் ஏற்பட்ட உணர்ச்சிப் பாதிப்புகள் கலவரங்களை அதிகப்படுத்திற்று. இதைவிடக் கேவலமான விஷயம் என்ன



வென்றால் நடுநிலையாகப் பணியாற்ற வேண்டிய ஒரு போலீஸ் அதிகாரியும் கறுப்புச் சின்னம் அணிந்து ஊர்வலத்தில் சென்றிருக்கிறார். பள்ளம் என்ற கிராமம் இரண்டு நாட்களுக்கு எரிந்து கொண்டிருந்தது. போலீஸ் ஐந்தாறு நாட்கள் கழித்துத்தான் அங்கு போனது. மக்கள், 'நீங்கள் இப்போது ஏன் வந்தீர்கள்?' என்று கோபமாகக் கேட்டுப் புகார் கூடக் கொடுக்காமல் இருந்து விட்டார்கள்.

''நிறையப் பேர் 'ஏன் ஆர். எஸ். எஸ். பற்றி எழுதினீர்கள், இது உங்கள் விசாரணைக் கமிஷன் வரம்புக்குள் வரவில்லையே' என்று கூறுகிறார்கள். அப்படிப் பார்த்தால், மதமாற்றத்தைத் தடை செய்ய வேண்டுமென்றும் பொதுவான சிவில் சட்டம் தேவையென்றும், மதப் பிரசாரத்துக்கும் மாற்றத்துக்கும் அந்நியப் பணம் இந்தியாவுக்குள் வருவதைக் கட்டுப்படுத்த வேண்டும் என்றும் கூட நான் சொல்லியிருக்கிறேன். இவையும் கமிஷனின் வரம்புக்குள் வராதவைதானே! ஆனால் ஏன் சொன்னேன்? ஒரு துயரமான சம்பவம் நடந்துள்ளது. இனி அப்படி நடக்காமல் இருக்க என்ன வழி? நடந்ததற்குக் காரணம் யார்? என்றெல்லாம் உணர்ந்தறிந்து எழுதும் போது இவற்றை எழுதித்தான் ஆக வேண்டும். கலவரங்களில், அப்பாவி இந்துக்களைத் தூண்டிவிட்டது ஆர். எஸ். எஸ். என்பது தெளிவாகத் தெரிந்த பின் குறிப்பிடாமல் இருப்பது தவறாகும். உண்மைகளை எழுதித்தான் ஆக வேண்டும்.

''மக்களுக்கு (குறிப்பாகக் கடலோர மீனவர்களுக்கு) இன்னும் கல்வியறிவை ஊட்டி, ஏராளமான வேலை வாய்ப்புக்களை உருவாக்கி, ஆரோக்கியமான சமூகப் பொருளாதாரச் சூழ்நிலையை உண்டாக்கினால் இதுபோன்ற கலவரங்கள் இந்த மாவட்டத்தில் நடக்காது என்பது என் திடமான முடிவு.'

சந்திப்பு: ப்ரியன்

படம்: மனோ

அடுத்த இதழில்...

## வண்ணக் கோலம் விகாரமாகிறது!

* எஸ். வி. சேகர் Vs கோபு, பாபு இவர்களுக்குள் என்ன தகராறு?

* ஏ. வி. எம். வண்ணக் கோலங்கள் அடைந்த வெற்றி இவர்களிடையே வெறுப்பை வளர்ப்பானேன்?







# குமரியை முன்னேற என்ன செய்யலாம்?

எல்லை ஊரான ஆரல்வாய் மொழியைத் தாண்டிக் கன்னியாகுமரி மாவட்டத்தில் நுழைந்ததும் காணப்படும் நீர் நிலைகள், பச்சை வயல்கள், அலை பறக்கும் சமுத்திரம், வாழைத் தோப்புகள், தென்னை மரங்களின் க்யூ ஆகியவை 'என்ன வளமில்லை இந்தத் திருநாட்டில்' என்று கையை உயர்த்திப் பாடச் சொல்லும். இம்மாவட்டத்தில் என்னென்ன பொருட்களைப் பயன்படுத்தி என்னென்ன தொழில்களை உருவாக்கலாம். ஒரு லிஸ்ட் போட்டுப் பார்க்கலாமா?

### ரப்பர் சார்பான தொழில்கள்

ரப்பர் உற்பத்தியில் தமிழகம் இரண்டாவது இடத்தையும் உயர் ரக உற்பத்தியில் இந்தியாவிலேயே குமரி மாவட்டம் முதலிடத்தையும் வகிக்கிறது. ஆனால் ரப்பரை ஆதாரமாகக் கொண்ட ஒரு தொழிற்சாலை கூட இங்கு கிடையாது. அரசுக்குச் சொந்தமான பல போக்குவரத்துக் கழகங்களில் பேருந்துகளுக்குத் தேவையான டயர், ட்யூப், ஷீட் போன்றவைகளைத்தயாரிக்கும்தொழிற்சாலைகளையாவது குறைந்தபட்சம் நிறுவிப் பலருக்கு வேலை வாய்ப்பளிக்க முடியும். மேலும், முதல்தரமான குளிர் தாங்கும் மெத்தைகள் தயாரிக்க முடியும். இந்த மெத்தைகளுக்குக் குளிர் மிகுந்த அயல்நாடுகளில் கிராக்கியோ கிராக்கி! இன்று அரசுக்குச் சொந்தமான ரப்பர் எஸ்டேட்டுகளில் எல்லாம் கிடைக்கும் ரப்பர் பாலைப் பம்பாய்க் கம்பெனிகள் வாங்கிச் சென்று கொழுத்துக் கொண்டிருக்கும்போது, நாம் விரல் சூப்பியபடி அதை வேடிக்கை பார்த்துக் கொண்டு இருக்கிறோம்!

### பெயிண்ட் தொழிற்சாலை

மணவாளக்குறிச்சியிலுள்ள 'Indian Rare Earths' மணல் ஆலையிலிருந்து பலவிதமான உயர் ரக மணல் ஏற்றுமதியாகிறது. இந்த மணல்உயர்ரகபெயிண்ட் உற்பத்திக்கு இன்றியமையாதது என்று சொல்லப்படுகிறது. இதைப் பயன்படுத்தி இங்கேயே ஒரு பெயிண்ட் தொழிற்சாலை அமைத்தால் பலருக்கு வேலை வாய்ப்பை ஏற்படுத்தித் தர முடியும்! செய்யக் கூடாதா? சும்மா இருக்கிறார்களே சார்!

### கயிற்றுத் தொழில்

ஈத்தாமொழி முதல் நீரோடி வரை பரவியிருக்கும் கடற்கரைப் பிரதேசத்தில் விளையும் தென்னைகளிலிருந்து உயர் ரக தும்பு தயார் செய்யக் கூடிய தேங்காய் நார் கிடைக்கிறது. பத்தாயிரம் பேருக்கு மேல் இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றனர்.

1982 — 83 சட்டமன்ற கூட்டங்களில் மிக நீண்ட விவாதத்திற்குப் பின், இம்மாவட்டத்தின் கலிங்கராஜபுரம் என்ற இடத்தில் கயிறு, மெத்தை, கயிற்றுப்பாய் போன்றவை உற்பத்தி செய்வதற்கான தொழிற்சாலை தொடங்கப்படும். அங்கு தயாராகும் பொருட்கள் அரசு அலுவலகங்களில் பயன்படுத்தப்படும் என்று அறிவிப்பு செய்யப்பட்டது. அறிவிப்போடு சரி.

## பனந்தும்பு தொழில்

இங்கே கிடைக்கும் பனந்தும்பு மாநிலத்திலேயே உயர்ந்த தரமுள்ளது. அதைப் பயன்படுத்தி என்னென்னவோ செய்யலாம். 1982 — 83, 1983 — 84 ஆண்டுகளில் 37 லட்ச ரூபாய் மூலதனத்தில் அதங்கோட்டில் நான்கு ஏக்கர் நிலப்பரப்பில் பனை பொருள் உற்பத்தி மையம் ஒன்று தொடங்கப்படும் என்று சட்டமன்றத்தில் அளிக்கப்பட்ட வாக்குறுதி காப்பாற்றப்பட்டிருந்தால் இன்று எத்தனையோ கிராம மக்கள் வேலை வாய்ப்புப் பெற்றிருப்பார்கள்.

## மீன் பிடி தொழில்

கன்னியாகுமரி முதல் கொல்லங்கோடு வரை நீண்டுகிடக்கும் கடல் பகுதியில் உடனடியாகத் தேவை இயந்திரப் படகுகள். அதற்குச் சில படகுத்துறைகளைக் கட்ட வேண்டும். படகுத்துறைகள் இம்மாவட்டத்தில் இல்லாத காரணத்தால், குமரியிலிருந்து கொல்லங்கோடு வரை மீன்பிடிக்கும் ஆயிரத்திற்கும் மேலான விசைப் படகுகள் எர்ணாகுளம், கொல்லம் போன்ற இடங்களுக்குச் சென்று விடுகின்றன. ஒரு படகுக்கு 4 பேர் வீதம் ஆயிரம் படகிலுமாக 4000 பேர் பெறுகின்ற கூலி அங்கே செலவழிக்கப்படுகிறது. தமிழகம் ஏமாந்து போகிறது. படகுகளைப் பத்திரப்படுத்திப் பாதுகாக்க எவ்வளவு தூரம் போக வேண்டி இருக்கிறது? மேலும் விளவங்கோடு தாலுகாவிலுள்ள ஏ. வி. எம். கால்வாயை ஆழப்படுத்தி, அகலப்படுத்திக் கடலையும், இங்கே அரிதாகக் காணப்படுகிற உப்பங்கழிகளையும் இணைத்தால் மீன் பிடி தொழில் இங்கே மிகச் சிறப்பாக வளருமே! மீன் பிடிப்பு வளர்ந்தால் மீன் சார்பான பல தொழில்கள் வளரும். மீன் பதனிடுதல், மீனைப் பாதுகாக்க ஐஸ் உற்பத்தி செய்வது போன்ற தொழில்களைக் கொண்டு பலருக்கு வேலை கொடுக்க முடியும். இந்தப் பயனையெல்லாம் இப்போது கேரளா அடித்துக் கொண்டு போகிறது. அட, கேரளாவைப் பார்த்துப் பொறாமைப் படவில்லை. நாம் வளர வேண்டும் என்ற உத்வேகமாவது வரவேண்டுமல்லவா?

## சுற்றுலாவா? வெற்று உலாவா?

சுற்றுலாப் பயணிகளுக்குச் சில அடிப்படை வசதிகளைச் செய்து கொடுத்தால் கன்னியாகுமரி ஒரு மிகச் சிறந்த சுற்றுலா மையமாக முடியும். கேரளத்தின் கோவளத்துடன் கோவாவின் பீச்சுடன் போட்டி போட இயலும். கொட்டாரம் போன்ற சுற்று வட்டாரங்களில் கிணறுகள் தோண்டி அந்தத் தண்ணீரைக் கொண்டு குமரியின் தண்ணீர்ப் பிரச்னையைத் தீர்க்க முடியும். பேச்சிப்பாறை, கோதையாறு போன்ற நீர்த் தேக்கங்களின் நீர்பிடிப்புப் பகுதிக்குள் தீவு போன்ற பகுதிகள் ஏராளம் உண்டு. அவற்றில் கண்கவர் தோட்டங்கள் அமைத்துப் படகு வசதி செய்தால் மலையும் முகடுகளும் பயணிகளை நிச்சயம் கவரும். சுற்றுலா தொடர்பாக இன்னும் எவ்வளவோ செய்யலாம்.

## மலை விளை பொருட்கள்

அன்னியச் செலவாணியை ஈட்டித்தரக் கூடிய மலைவிளை பொருட்களாகிய மிளகு, கிராம்பு, இஞ்சி, ஜாதிக்காய் முதலியனவும், நினைத்தாலே நாவில் நீர் ஊற வைக்கும் செவ்வாழை, மட்டி, நேந்திரம் போன்ற பல விதமான வாழை வகைகளும், இந்த மாவட்டத்தில் உற்பத்தியாகின்றன. ஒரு காலத்தில் கேரளத்தின் நெற்களஞ்சியம் என்று கூறப்பட்ட நாஞ்சில் நாடு இன்றும் நெற்களஞ்சியம்தான். விவசாயத்தை விஞ்ஞான முறையில் செய்து உற்பத்தியைப் பெருக்க, விவசாய ஆராய்ச்சி மையமும் மாதிரிப் பண்ணையும் கொண்ட ஒரு விவசாயக் கல்லூரி மிகமிகத் தேவை. பள்ளக்குளம் என்ற இடத்தில் எப்போதும் தண்ணீர் வசதியுள்ள 900 ஏக்கர் பரப்பளவு நிலம், மாதிரிப் பண்ணை நிறுவ வசதியுள்ளதாக இருக்கிறது.

## முந்திரித் தொழில்

இந்தத் தொழிலில் பத்தாண்டுகளுக்கு முன் 160 தொழிற்சாலைகளில் சுமார் 70,000 பேர் நிரந்தரத் தொழிலாளர்களாயிருந்தனர். ஆனால் இப்போதோ பல தொழிற்சாலைகள் ஆண்டின் பல மாதங்கள் மூடிக் கிடக்கின்றன. எதனால்? குமரியில் விளையும் முந்திரியைத் தமிழக அரசு பகிரங்க ஏலத்தில் விடுவதால் அதிக விலைக்கு அண்டை மாநிலத்து வியாபாரிகள் அந்த முந்திரியைத் தட்டிச் செல்கின்றனர். அதனால் இங்கே ஆலைகள் மூடப்படுகின்றன. தொழிற்சங்கங்கள் போராடினாலும், சட்டமன்றத்தில் குரல் எழுப்பினாலும் எந்தப் பயனும் இல்லை. கணிசமான அளவு அன்னியச் செலவாணியை ஈட்டித் தரும் விளைபொருளில் முந்திரியும் ஒன்று. எனவே இதற்கும் இது போன்ற வேறு ஏற்றுமதிப் பொருள்களின் அபிவிருத்திக்கும் மத்திய அரசின் உதவி பெற்று இந்த மாவட்டத்தை வளம் கொழிக்கச் செய்வது சாத்தியமே. தேவை: ஆட்சியிலுள்ளோரிடம் சுயநலங்களை ஒதுக்கிய முயற்சி மட்டுமே,

— வி. பொன்னுசாமி,
(ஆங்கிலப் பேராசிரியர்)





# ஒரு புல்லாங்குழல் அஞ்சலி செலுத்துகிறது...

* நான் மாலியிடம் படிக்கச் சேர்ந்த போது, அவர் நுங்கம்பாக்கம் கிருஷ்ண மாச்சாரி தெருவில் குடியிருந்தார். பாடுகிற மாதிரியே சொல்லித்தருவார். சாகித்தியம் முக்கியம் என்பார். 'நான் வாசிக்கிற மாதிரி காப்பி அடித்து வாசிக்கக் கூடாது' என்பார். சொல்லிக் கொடுக்கிற போது டேப் எடுத்துக் கொள்ளச் சொல்லுவார் — நன்றாக வாசிக்க வேண்டும், ஞாபகத்தில் இருக்க வேண்டும் என்பதற்காக.

* தமிழ் தவிர இந்தி, கன்னடம், தெலுங்கு, ஆங்கிலம் என்று நான்கு மொழிகள் தெரியும் அவருக்கு. ஒரு சிஷ்யையை ஏற்றுக் கொண்டு புல்லாங்குழல் சொல்லித் தருமாறு 15.4.86 அன்று ஆங்கிலத்தில் எனக்கு ஒரு கடிதம் கொடுத்தனுப்பியிருக்கிறார். இதுதான் அவருடைய கடைசிக் கடிதம் போலும். முத்துக் கோத்தாற் போன்ற கையெழுத்து.

* இடது கையில் முறிவு ஏற்பட்டு, கடைசி இரண்டு விரல்களை மடக்க முடியாமல் கஷ்டப்பட்டார். முதல் நாள் டெல்லியிலிருந்து திரும்பும்பொழுது, பிளேனில் அருகே உட்கார்ந்திருந்த டி. கே. பட்டம்மாள், 'காலை வலிக்கிறது' என்று சொன்னபோது, ''எனக்குக் கையை வலிக்கிறது!'' என்று ஜோக் அடித்துச் சிரித்தார் மாலி. ஆனால் அதில் உண்மை உண்டு; சிரமப்பட்டுத்தான் வாசித்தார்.

* கச்சேரிகளுக்குப் போய் வாசிப்பது என்றால் பிடிக்கவே பிடிக்காது. பாப்பா வெங்கட்ராமையாவின் பாணி அவரைப் பாதித்திருக்கக் கூடும். அவர் வயலின் சாயலை இவரது புல்லாங்குழலில் கேட்கலாம்.

* பத்ம பூஷண் விருது கொடுக்கப்பட்ட போது ஏன் மறுத்து விட்டார்? ''இதற்கும் மேலே ஒன்று இருக்கிறது. யார் யாருக்கெல்லாமோ கொடுக்கிறார்களே, எனக்குக் கொடுத்தால் என்ன?'' என்றார்.

* சமீபத்தில் சிடர் சங்கரன் அண்ணாமலைபுரத்தில் தியாகராஜ ஆராதனையில் கலந்து கொள்ள அழைத்திருந்தார். மாலை எல்லாம் வாங்கி வைத்திருந்தார். ''எனக்கு மாலை எல்லாம் வேண்டாம். ஒரு காவி வேஷ்டியும், காவி சட்டையும் வாங்கிக் கொடு போதும்'' என்றார். ''நாம் பக்தியோடு வாசிக்கணும். அப்படி வீட்டில் வாசித்தால் போதும். கிளாப்ஸ் கிடைக்கும் என்பதற்காகத் திருவையாறுக்கு எல்லாம் போய் வாசிக்கணும் என்பது கிடையாது!'' என்று பேசினார்.

* அன்புக்கு எளிதில் அடிமையாகிவிடும் அபூர்வ மனிதர். தத்துவப் பேச்சில் மன்னன்.

* மாலிக்கு மூன்று சகோதரிகள்; இரண்டு சகோதரர்கள். குடும்பத்தில் எல்லாரையும் முன்னுக்குக் கொண்டு வந்தவர் மாலிதான். மருமான் ராம்குமார் சமீபத்தில்தான் காலமானான். ராம்குமார் என்றால் மாலிக்கு உயிர்.

* மாலி காலமான அன்று முதலமைச்சரின் பைலட் வண்டி வந்து பார்த்து விட்டுப் போயிற்று; வரப் போகிறார் என்றார்கள். பிறகு, ''தில்லியிலிருந்து யாரோ வரவிருப்பதால் சி. எம். வர இயலாது. காரியத்தை முடித்து விடுங்கள்!'' என்றார்கள்.

பேசியவர்; மாலியின் மாணவி: **என். கேசி.**

எழுதியவர்: **சாருகேசி.**

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543).

Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.

# காலைப் புதுமை மாலைவரை நீடிக்கச் செய்யுங்கள்!










<u>உண்மையான</u> புத்துணர்ச்சி. மற்ற சோப்புகள் தரும் குறைந்த நேர புத்துணர்ச்சி அல்ல. நாள் முழுவதும் உடலின் வியர்வை நாற்றமின்றி திகழும் புத்துணர்ச்சி! புதிய ஸின்த்தால் மட்டுமே அதனைத் தரவல்லது. இப்போது, ஒரு புதிய அற்புத நறுமணம் ஸின்த்தாலில் உள்ளது.

மேலும் அதன் சக்திவாய்ந்த வியர்வை துர்நாற்றம் போக்கும் தன்மை, சரும கிருமிகளை ஒழித்து உங்களை நாள் முழுவதும் நாற்றமின்றி புத்துணர்ச்சியுடன் வைத்திடும்.

**ஸின்த்தால்** மட்டுமே

உங்களை புத்துணர்ச்சியுடன் வியர்வை நாற்றமின்றி நாள் முழுவதும் வைத்திடும்.

Godrej
தயாரிப்பு